

Sri D. Seetharam aiah, Chairm an, T.T.D. Trust Board is seen inaugurating the T.T.D. Kalyanam andapam at Guruvayur on Decem ber 15, 1988.





A view of the Kalyanam andapam





Elephant procession taken out on the occasion of the inauguration

Meeting



தியாயேத் சூரியம் அனந்த சக்திகிரணம் தேஜோமலம் பாஸ்கரம்

பக்தானாம் அபயப்ரதம் தினகரம் ஜோதிர்மயம் சங்கரம்|

ஆதித்யம் ஜகதீஷமச்சுதமஜம் த்ரைலோக்ய சூடாமணிம்

பக்தாபிஷ்ட வரப்பிரதம் தினமணிம் மார்த்தாண்ட மாத்யம் சுபம்||

த்விபுஜம் பத்ம ஹஸ்தம்ச வரதம் முகுடான்விதம்|

தியாயேத் திவாகரம் தேவம் ஸர்வாபிஷ்ட பிரதாயகம்|

கணக்கற்ற ஒளிக்கதிர்களையுடையவனும், குறையற்ற தேஜஸ்யுடையவனும் பக்தர்களுக்கு நம்பிக்கை ஒளியாக இருப்பவனும், துன்பத்தை நீக்குபவனும் (அதிதி மரபில் உதித்து) ஆதித்யன் எனும் பெயர் பூண்டு இவ்வுலகில் அழிவு எனும் குறைபாடு இல்லாது, மூன்று உலகங்களுக்கும் சூடாமணி போன்றவனும், பக்தர்கள் விரும்பும் வரங்களை அளித்து, நாட்களைத் தோற்றுவித்து, படைப்பின் ஆதியாகவும், சுகத்தின் கருவாகவும் இருப்பவனும், பரந்த தோளிரண்டினைப் பெற்று, கைகளில் தாமரைமலர்களைக் கொண்டு, தலையில் மணிமுடி தாங்கி, வரங்களின் ஊற்றாக அமைந்து, இருட்டினை அகற்றி, வேண்டியதை விரைந்து மிக்கு அளிக்கும் ஞான ஸ்வரூபியான சூரியனைப் பணிந்தேற்றுவோமாக!

# செய்திச் சுருக்கம்

**ஆ**ந்திர மாநில உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி திரு. எம். யோகேஸ்வர தயாள் அவர்கள் 18-12-88 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். கோயிலில், தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு மற்றும் இணை செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் ஆகியோர்களால் வரவேற்கப்பட்டார்.

**வைகுண்ட ஏகாதசி:**

வைகுண்ட ஏகாதசி நாளான 19-12-88 அன்று திருமலைக்கு ஏராளமான யாத்திரிகப் பொது மக்கள் வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர். அன்று காலை 4 மணிக்கே யாத்திரிகர்களுக்காக வருடத்திற்கு ஒரு முறை திறக்கப்படும் வைகுண்ட திருவாசல் திறக்கப்பட்டது. அத்திருவாசல் பல வண்ண மலர்களாலும், வண்ண விளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்டது. காலை 1 மணிக்கே, தரும தரிசனத்திற்காகவும், வைகுண்ட வாசலில் செல்வதற்கும் பொது 'க்யூ'வில் சுமார் 10,000 யாத்திரிகர்களும், சிறப்பு நுழைவு வரிசையில் சுமார் 7500 யாத்திரிகர்கள் குழுமினர். இவ்வைகுண்ட திருவாசல் அடுத்த நாள் மதியம் 12 மணி வரை யாத்திரிகர்களுக்காக திறந்து வைக்கப்பட்டிருந்தது.

**'இணைப்பு நிலையம்':**

திருமலை திருப்பதி தேவஸ்தானம் திருமலையில் 'ஒலிப்பரப்பு இணைப்பு நிலையம்' ஒன்றினை அமைத்துள்ளது. 18-12-88 அன்று தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்களால் இந்நிலையம் திறந்து வைக்கப்பட்டு தற்போது செயல்பட்டு வருகின்றது. திருமலை நாராயணகிரி குன்றின்மேல் இருக்கும் இந்நிலையம் சுமார் 50 மைல் சுற்றளவு பகுதியினை இணைத்திடும் வகையிலும் மற்றும் சுமார் ஆறு தி. தி. தே. கோயில்கள் இதனால் எளிதில் ஒன்றுக்கொன்று தொடர்பு கொள்ளும் வகையிலும் திகழும். 17 மையங்கள் இந்நிலையத்துடன் இணைக்கப்படும். தற்போது திருமலையில் கோயில், வைகுண்டம் 'க்யூ' கட்டிடத் தொகுதி, மலைவழிச் சாலை, காவல் நிலையம், திருப்பதியில் தேவஸ்தான நிருவாகக் கட்டிடம் ஆகிய சில இம்மையங்களில் அடங்கும். விரைவில் மேற்கூறிய 17 மையங்களும் இவ்வொலிப் பரப்பு இணைப்பு நிலையத்துடன் இணைக்கப்படும்.

**விற்பனைப் பிரதிநிதிகள் கூட்டம்:**

திருப்பதியில் 22-11-88 அன்று எமது 'ஸப்தகிரி' அலுவலகக் கட்டிடத்தில் ஸப்தகிரி விற்பனைப் பிரதிநிதிகள் சிலர் மற்றும் புகழ்பெற்ற பதிப்பகங்களின் பிரதிநிதிகள் பங்கேற்கும் வகையில் 'குழுகூட்டம்' ஒன்று நடைபெற்றது. தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஐ. எல். என். சாஸ்திரி, தி தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார், ஸப்தகிரி ஆசிரியர் திரு. கே. சுப்பாராவ், பொதுஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயணமூர்த்தி, ஊழியர் நல அலுவலர் திரு. எம். ராமகிருஷ்ணய்யா ஆகியோரும், 'ஸப்தகிரி' விற்பனைப் பிரதிநிதிகள் சார்பில் ஈரோடு நகர் விற்பனையாளர் திரு. எம். வி. சாரி, வேலூர் நகர விற்பனையாளர் திரு. எம். வெங்கட்ராமய்யர் மற்றும் ஆந்திர மாநிலத்தின் நெல்லூர், ஹைதராபாத், குண்ட்டூர் போன்ற நகரங்களைச் சார்ந்த பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர். மேலும் நவோதயா வெளியீடு, விசாலாந்திரா வெளியீடு, இண்டியா புக் அவுஸ், திரிவேணி வெளியீடு ஆகிய நிறுவனங்களின் பிரதிநிதிகளும் இக்குழுக் கூட்டத்தில் பங்கேற்றனர். தி. தி. தே. வெளியிடும் நூல்கள் விற்பனை முறை, அதற்கான விதி முறைகள் சம்பந்தமாக பல ஆக்கப் பூர்வமான கருத்துரைகளை நூல் வெளியீட்டாளர்கள் தந்தனர். அவை தகுந்த முறையில் பரிசீலிக்கப்பட்டு, ஏற்றுக் கொள்ளப்படும் என்று மேலாண்மையின் சார்பில் உறுதியளிக்கப்பட்டது. 'ஸப்தகிரி' விற்பனைப் பிரதிநிதிகள் தங்கள் கருத்தினைத் தெரிவித்திடுகையில் பெரும்பான்மையோர் 'ஸப்தகிரி' கால தாமதமாக வெளி வருவதைப் பற்றி விவாதித்தனர். வேலூர் விற்பனைப் பிரதிநிதி திரு. எம். வெங்கட்ராமய்யர் பேசுகையில் இதழில் சிறுவர்களுக்கான பகுதியின் அவசியத்தைப் பற்றிக் கூறினார். மேற்கூறிய குறைபாடுகளை விரைவில் நீக்கிடும் வகையில் முயற்சிகள் மேற்கொள்ளப்படும் என்று திரு. என். ரமேஷ்குமார் கூறினார். 1986, 1987, 1988 ஆண்டுகளில் அதிக அளவில் தெலுங்கு ஸப்தகிரி பத்திரிகை விற்பனைபுரிந்தகுண்ட்டூர் விற்பனைப்பிரதிநிதி திரு. வி. உமாசங்கர் அவர்களை திரு. ஐ. எல். என். சாஸ்திரி அவர்கள் வெள்ளிப் பதக்கனை அணிவித்துக் கௌரவித்தார்.

[மேற்கூறிய மூவாண்டுகளில் சென்னை விற்பனைப் பிரதிநிதியான திரு. ஏ. டி. கிருஷ்ணன் அவர்கள் அதிக அளவில் தமிழ் 'ஸப்தகிரி'யினை விற்றவராவார்]

**'தர்ம பிரசார பரிஷத்' சென்னையில் துவக்கம்:**

திருப்பதி தேவஸ்தானம் – 'தர்ம பிரசார பரிஷத்' சென்னை-தியாகராய நகர், நெ. 50 வெங்கட நாராயணா சாலையில் உள்ள தி. தி. தே. தகவல் அறிவிப்பு நிலையத்தில், அண்மையில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத் குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது. ஸ்ரீஸ்வாமிகள் அருளாசி வழங்கினார்கள். விழாவில், 'தர்ம பிரசார பரிஷத்' செயலாளர் டாக்டர். மேடசானி மோகன், எம்.ஏ.பி.எச்.டி. அவர்களும், தி. தி. தே. மேலாண்மைக் குழு உறுப்பினர் திரு. எல். வி. ராமய்யா, திரு. ஸோமயாஜுலு ஆகியோர் பேசினார்கள். 'தர்ம பிரசார பரிஷத்' அமைப்பாளர் ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில் முதலில் இச்சபை ஆற்காட்டில் மூன்றாண்டு காலமும், பிறகு வேலூரில் மூன்றாண்டுகளுக்கு மேலாக இயங்கி வந்ததாகவும், இந்த இரண்டு இடங்களிலும், தற்போது சென்னையிலும் ஆக மூன்று இடங்களிலும், காஞ்சி பீடாதிபதி ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகளே கருணையுடன் விஜயம் செய்து துவக்கி வைத்துள்ளார்கள் என்று கூறினார்.

சென்னையிலுள்ள கோவில் நிர்வாகிகளும்-பஜனை-சமய சொற்பொழிவு-ஹரிகதா காலட்சேபங்கள் செய்வோரும் ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் அமைப்பாளர் 'தர்ம பிரசார பரிஷத்' நெ. 50 வெங்கட நாராயணாரோடு தி. தி. தே. தகவல் அறிவிப்பு நிலையம் (போன். 443535) தியாகராய நகர், சென்னை-17 எனும் விலாசத்துடன் தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.



# வேதம் தமிழ் செய்தவர்களும் பிரபந்தமும்

முன்னுரை :

வேதம் தமிழ் செய்தவர்கள் என்ற தலைப்பைப் பார்த்தவுடன், வாசகர்களுக்கு, 'வேதத்தை யார், எப்போது தமிழில் செய்தார்கள். என்று சற்று ஆச்சரியமாக இருக்கலாம். ஆனால் வைணவத்தில் நன்கு தேர்ச்சி பெற்றவர்களுக்கும், ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தங்களில் நன்கு பயிற்சி உள்ளவர்களுக்கும் விடை உடனே கிடைத்துவிடும். மற்றவர்கள் நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் 'மதுர கவியாழ்வார்' அருளிச் செய்துள்ள, 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பிரபந்தத்தின் தனியனைப் படித்தால் அவர்களுக்கும் விடை கிடைத்து விடும். தனியன் பின்வருமாறு:

"வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த,
மாறன், சடகோபன், வண் குருகூர் ஏறு-எங்கள்
வாழ்வாமென்றுறேத்தும், மதுரகவி யார்-எம்மை
ஆள்வாரவரே அரண்".

இத்தனியனை இயற்றியவர் ஸ்ரீமந் நாதமுனிகளாகும். மதுரகவியாழ்வார் என்பவர் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகும். இவர் இயற்றிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தம் 10 பாசுரங்கள் கொண்டதாகும். இவ்வாழ்வார் தம் பிரபந்தத்தில் வேறு எந்த தெய்வத்தையும் மங்களாஸாசனம் செய்யாமல் தம் ஆசார்யரும் வேதம் தமிழ் செய்தவருமாகிய, மாறன் என்றும், சடகோபன் என்றும் பெயர் கொண்ட நம்மாழ்வாரை மட்டுமே மங்களாஸாஸனம் செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. தவிர இவ்வாழ்வார் ஆசார்ய பக்தியில் மிகவும் தலைசிறந்தவராக கருதப்படுபவர். இவர் ஆசார்ய பக்திக்கு எடுத்துக்காட்டாகவும் இருந்தவர். முன் சொல்லப்பட்ட தனியனில் இது பேசப்பட்டிருப்பதை

திரு. D. கேசவ அய்யங்கார்,
அல்லூர்.

கால், ஆழ்வார் அவதாரஸ்தலமான, திருக்குருகூர் சென்றால் கிடைக்கலாம் என்று சொல்ல, இதை முழுவதுமாக தெரிந்து கொள்ளவேணும் என்ற அவாவினால், திருக்குருகூர் சென்று மதுரகவிகளின் சீடரான, 'பராங்குஸ தாஸரை', அடைந்து அவர் உபதேசப்படி, 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பிரபந்தத்தை, பன்னீராயிரம் தடவை ஜபித்தார். அதன் பலனாக 'நம்மாழ்வார்', நாதமுனிகள் முன்தோன்றி, 'திருவாய்மொழி' உள்ளிட்டு எல்லா பிரபந்தங்களையும் உபதேசித்தருளினார். இவ்விதமாக ஆயிரம் பாக்கள் தேடிய நாதமுனிகளுக்கு 'நாலாயிரமும்' கிடைத்தது என்று குரு பரம்பரா பிரபாவங்கள் தெரிவிக்கின்றன. இவ்விதம், தான் அறிந்து வந்த நாலாயிரத்தையும், நாதமுனிகள், தன் மருமக்களான, 'மேலையகத்தாழ்வான்', 'கீழையகத்தாழ்வான்' என்ற இருவருக்கும், இயலும் இசையுமாக அமைத்துக் கொடுத்து, பிரபந்தங்களை எங்கும் பரவும்படிச் செய்தார்.

**வேதமும் பிரபந்தமும் :**

வடமொழி வேதங்கள், 'ரிக், யஜுஸ், சாம, அதர்வண' என்று நான்கு வேதங்களாகும். வேதத்தின் முடிவான பாகங்கள், 'உபநிஷதங்கள்' எனப்பெயர் கொண்டதாகும். வேதங்களுக்கு, 'சிக்ஷா, சந்தஸ், வ்யாகரணம், நிருக்தம், ஜோதிஷம், கல்பம்' என்ற ஆறு வேதாங்கங்கள் இருக்கிறது. இதுபோல, பிரபந்தத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்துள்ள, 100 பாசுரங்களைக் கொண்ட 'திருவிருத்தத்தை' ரிக் வேதத்தின் சாரம் என்றும், 7 பாசுரங்களைக் கொண்ட 'திருவாசிரியத்தை' யஜுர் வேதத்தின் சாரம் என்றும், 1102 பாசுரங்களைக் கொண்ட, 'திருவாய்மொழியை' சாம வேதத்தின் சாரம் என்றும், 87 பாசுரங்களைக் கொண்ட 'பெரிய திருவந்தாதியை' அதர்வண வேதத்தின் சாரம் என்றும் நம் பூர்வாசாரியர்கள் நிர்ணயம் செய்து வைத்துள்ளனர். வேதாங்கங்கள் ஆறு இருப்பதைப் போலவே, 'திராவிட வேதமாகிய பிரபந்தங்களுக்கு, திருமங்கையாழ்வார்' அருளிச் செய்துள்ள ஆறு பிரபந்தங்களான, 'பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுக் கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகியவை அங்கங்களாக உள்ளது என்று, ஸம்ப்ரதாயம் வல்ல, நம் முன்னோர்கள் நிர்த்தாரணம் செய்துள்ளனர். இக்கருத்தை, ஸ்ரீ மணவாள மாமுனிகள்' தாம் இயற்றியுள்ள, 'உபதேசரத்தின மாலை' பாசுரம் 9ல்,

"மாறன் பணித்த தமிழ் மறைக்கு
மங்கையர்கோன்
ஆறங்கம் கூற அவதரித்த ........

என்று அருளிச் செய்துள்ளார்.

தவிர ஸ்ரீமத் பாகவதமானது வேதத்தின் சாரம், உபநிஷதங்களின் சாரம் என்று வேதமறிந்த வல்லுனர்கள் கூறுகிறார்கள். வேத, உபநிஷதங்களின் சாரமாகவும் ஸ்ரீ கண்ணபிரானுடைய சரித்திரத்தையும், லீலா விநோதங்களையும் கூறும் ஸ்ரீமத் பாகவதத்தை பெரியாழ்வார் தம் பெரியாழ்வார் திருமொழி, வாயிலாக தமிழாக்கம் செய்துள்ளார் என்றால் அது மிகையாகாது. கண்ணனுடைய அவதாரம் முதற்கொண்டு எல்லா ருவங்களையும் பாடலாக சிறப்பாகப் பிள்ளைத் தமிழாகவே இயற்றியுள்ளது மிகவும் சிறப்பாக உள்ளது. தவிர கண்ணனுடைய பால்யசேஷ்டைகள், அமானுஷ்ய கார்யங்கள், வேணுகானம் முதலியவைகளை அற்புதமான பாடலாக இயற்றியுள்ளது குறிப்பிடத்தக்கது. தவிர இதிஹாஸ, புராணங்களையும் அவைகளின் கருத்துக்களையும், ஆழ்வார்கள் பிரபந்தமாக செய்துள்ளனர். ஸ்ரீராமனையும் ஸ்ரீகிருஷ்ணனையும் பாடாத ஆழ்வார்களே இல்லையெனலாம். பெரியாழ்வாரும் குலசேகராழ்வாரும், ஸ்ரீராமனையும் ஸ்ரீகிருஷ்ணனையும் நன்கு அனுபவித்து பாடியிருப்பதுபோல் வேறு யாரும் பாடவில்லை என்று திட்டமாக சொல்லலாம். தவிர ஆழ்வார்கள் ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள நவவித சம்பந்தங்களிலும் பாடியிருக்கின்றனர். இவைகளை தவிர சூடிக் கொடுத்த நாச்சியரான ஸ்ரீ ஆண்டாளின் திருப்பாவையைப் பற்றி கூறுமிடத்து, 'பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும் வேத மனைத்துக்கும்வித்தாகும்' என்று கூறியிருப்பதிலிருந்தே வேதங்கள் தமிழ் செய்யப்பட்டுள்ளது என்பது நன்கு புலனாகும். தவிர ஸ்வாமி வேதாந்த தேசிகன் திருப்பாவையை, 'கோதா உபநிஷத்' என்றே குறிப்பிட்டிருக்கிறார். இச்சந்தர்பத்தில் ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள, அதிகார சங்கிரகம் 2ம் பாசுரத்தின் கடைசி இரண்டு அடிகளையும் நன்கு மனதிற் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

"செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய
ஓதி
தெளியாத மறைநிலங்கள் தெளி
கின்றோமே."

**அருளிச் செயல்களான பிரபந்தத்தின் ஏற்றம் :**

வேத வாக்யமான, 'யதாவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ' என்பதின்படி, வடமொழி வேதமானது எம்பெருமானுடைய கல்யாண குணங்களைப் பேசத் தொடங்கி, அவற்றின் முடிவை எட்ட முடியாமல், பின்னும் எம்பெருமானை நாடி, தேடிச் செல்வதாக இருக்கிறது. இக்காரணத்தால்தான் வடமொழி வேத பாராயணம், எம்பெருமான் புறப்பாட்டில் எம்பெருமானுக்கு பின்னால் பாராயணம் செய்யப்பட்டு வருகிறது போல் இருக்கிறது. ஆனால் தமிழ் வேதமாகிய பிரபந்தங்கள், பெருமாள் புறப்பாட்டின் போது, எம்பெருமானுக்கு முன்னால் பாராயணம் செய்யப்பட்டு வருவதால் பிரபந்தத்திற்கு ஏற்றமாகிறது. தவிர ஆழ்வார்களின் ஈரச்

(44-ஆம் பக்கம் பார்க்க)

# நாயகி சுவாமிகள் போற்றும் ஆண்டாள் திருவடி

'வ்யாஸாய விஷ்ணுரூபாய' என்றபடி சாக்ஷாத் மஹாவிஷ்ணுவே வேத வியாஸராக அவதரித்தார். தானே விஷ்ணு அம்சமாயினும் மஹாவிஷ்ணுவின் பெருமைகளைக் கூறும் பாகவதம், மஹா பாரதம் முதலிய காவியங்களை இயற்றியுள்ளார். அதே போன்று வங்கத்தில் உதித்த சைதன்ய மஹாபிரபு கிருஷ்ண பகவானின் அவதாரம் எனக் கருதப்படுகிறார். தானே கிருஷ்ண அம்சமாயினும் கிருஷ்ண பரமாத்மாவின் பெருமைகளைப் பரப்புவதில் சைதன்யர் தமது வாழ்க்கையை அர்ப்பணித்தார். ஆழ்வார்களில் ஒருவரும் பெரியாழ்வாரின் வளர்ப்பு மகளுமான ஆண்டாளின் அவதாரமாய் கருதப் படுபவர் 'மதுரையின் ஜோதி'யாய் விளங்கும் ஸ்ரீமந் நடன கோபால

திரு. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி-ஈரோடு.

நாயகி சுவாமிகள். நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் நாயகி பாவத்தில் கண்ணன்மீது பாக்கள் பல புனைந்துள்ளனர். ஆனால் நாயகி சுவாமிகள் உள்ளத்தால் மட்டுமல்லாது உடலாலும் தமது பெயராலும் கண்ணனின் நாயகியாகவே தம்மை நடத்திக் கொண்டார். பெயர் நடன கோபால நாயகி - சிரத்தில் ஆண்டாள் கொண்டை, காலில் சலங்கை. பகவான் ஒருவர்தான் புருஷர், ஜீவாத்மாக்கள் அனைவரும் ஸ்திரீகள் எனும் கருத்துப்படி தம்மை கண்ணனின் காதலியாகவே வரித்துக் கொண்டவர் நாயகி ஸ்வாமிகள். உள்ளத்தாலும் உடலாலும் கண்ணனின் நாயகியாய் விளங்கிய இவர் ஆண்டாளின் அவதாரமாய் கருதப்படுவதில் வியப்பென்ன? எப்படி வேத வியாஸரும் சைதன்ய மஹா பிரபுவும் தங்களது மூல அம்சங்களைப் போற்றினார்களோ நாயகி சுவாமிகளும் தமது மூல அம்சமான ஆண்டாளைப் போற்றியும் போற்றுவதனால் நாம் பெறும் நலன்கள் குறித்தும் விரிவாக ஒரு பாடலைப் பாடியுள்ளார்.

"அடையுங்கள் அடையுங்கள் ஆண்டாள்
திருவடி அடையுங்கள்
நம் ஆண்டாள் திருவடி அடையுங்கள்"

என பல்லவியில் தொடங்கும் இப்பாடலில் ஆண்டாள் திருவடியை அடையுமாறு நம்மை வேண்டுகிறார். வைஷ்ணவ சம்பிரதாயத்தில் பகவான், பாகவதன், ஆசார்யர் இவர்களின் திருவடிகளுக்கு மிகுந்த மதிப்பும் ஏற்றமும் தருவது மரபாகும். இதில் ஆண்டாள் தமது நெறி காட்டுதலால் பகவானை நாம் அடைவதற்கு உதவுவதால் ஆசார்யராகிறாள். எனவே ஆண்டாளின் திருவடிக்கு ஏற்றம் அளித்து ஆண்டாள் திருவடி அடையுங்கள் எனப்பாடுகிறார் நாயகி சுவாமிகள்.

அனுபல்லவியில் அவர் கூறுவது என்ன?

"விடையேறும் சிவனாதி தேவர்கள்
போற்றும்
நடன கோபாலனிடம் சேர்த்திடுவாள்"

நந்தி வாகனம் ஏறும் சிவன் முதலான தேவர்கள் போற்றும் நடன கோபாலனான கண்ணனிடம் ஆண்டாள் நம்மையெல்லாம் சேர்த்திடுவாள் என்கிறார் நாயகி சுவாமிகள்.

சரணங்களாக இப்பாடலில் பன்னிரெண்டு 4 அடிகளை உடையதாக 48 அடிப்பாடலை பாடியுள்ளார் சுவாமிகள். ஆண்டாள் திருவடி போற்றுவதால் நாம் அடையப் போகும் நலன்களைப் பட்டியலிட்டுத் தருகின்றார் சுவாமிகள். 48 அடிகளில் சுவாமிகள் பாடியுள்ள பாடலை விளக்கமளிக்க முற்பட்டால் அது ஒரு முழு நூலாகவே வடிவெடுக்கும். விரிவஞ்சி இங்கு 48 அடிகளில் முக்கியமாக அவர் கூறும் கருத்துக்களின் சாரத்தை மட்டும் இங்கு இயம்புகிறேன்.

பவரோகம்-பிறப்பு, இறப்பு எனும் தீராத வியாதி நீங்கி பிறவா நிலை எனும் மோக்ஷத்தைப் பெறலாம். பஞ்சேந்திரியம் ஒன்றாய்ச் சேரும்; ஐம்புலன்களை அடக்கி யாளலாம். யோக நிலை பெறலாம் என்கிறார். நல்வழியான தவம் கைகூடும். தாரணியோர் - உலகத்தினர் வாய் நமது புகழை பாடும் என்கிறார். ஸ்ரீ வில்லிபுத்தூர் உறையும் ஆண்டாளின் திருவடியைத் தொழுவதால் இவையெல்லாம் நாம் அடையலாம் என்கிறார் சுவாமிகள்.

முக்குணங்களில் கடைப்பட்டதான தாமச குணம் ஒழிந்து சுறுசுறுப்பாக இயங்க முடியும் என்கிறார். ஆண்டாள் பகவானின் நினைவில் தமது வாழ்க்கையை எவ்வளவு சுறுசுறுப்பாய் அமைத்துக் கொண்டாள் என்பதனை நாம் அவரது வரலாற்றிலிருந்து நன்கறிவோம். மேலும் சாகர சஞ்சலம் ஒழியும் என்கிறார். அதாவது அலை பாயும் கடல் போல் மனம் நிலையில்லாமல் பாயும். அத்தகு துன்ப நிலை ஒழியும் என்கிறார். நித்ய அனுஷ்டான-நியமம் நிறைந்த வழி தெரிந்து உண்மையான பக்தி நம்மில் விரியும் என்கிறார்.

இகபர வாழ்வு பலிக்கும். பரத்தில் மட்டும் நலம் விளைவிப்பதல்ல ஆண்டாள் திருவடி. இக வாழ்விலும் நாம் நல்வாழ்வு பெறுவதற்கும் வழி வகுப்பது இத்திருவடி என்கிறார்

சுவாமிகள். எண்ணமது நல்வழி நிலைக்கும்-நமது எண்ணங்கள் நல்வழியில் நின்றால்தான் நாம் நலன்பெற இயலும். அதற்கு வழி காண்பிப்பது ஆண்டாள் திருவடி என்பது நாயகி சுவாமிகளின் திருவாக்கு.

இருவினைகளையும் களையும் என்கிறார் சுவாமிகள். அதாவது நல்வினை, தீவினை எனும் இரு வினைகள் மனிதனைக் கட்டுப்படுத்துபவை. இது பிறவித்தளைக்கு வழி வகுப்பவை. வினைப்பயன் நீங்கினால்தான் பிறவா நிலை ஏற்படும். ஆண்டாளின் திருவடி அடைவதால் இருவினைகளும் நமது ஆட்சிக்கு உட்பட்டு அதன் மூலம் செயல் புரிபவர்களாக நாம் விளங்கிடினும் நம்மை வினைப்பயன் அண்டாது. வீடு பெறலாம் என்கிறார் மதுரையின் ஜோதியான நாயகி சுவாமிகள். மேலும் உலக வாழ்வில் துன்பங்கள் நம்மை அணுகாது என்கிறார். குருவருளும் தானேனுங்கும், கோபாலன திருவடி தலை தாங்கும் என்றும் கூறுகின்றார் சுவாமிகள்.

அந்தகன் வந்தனம் செய்வான்- அந்தகன் யார்? எமன்தான். அவன் நம்மை நோக்கி வந்தனம் செய்வான் என்கிறார். ஏன்? சாதாரணமாக மனிதனது இறப்புக்குப் பின் அவன் செய்தவினைப் பயனுக்கேற்ப சொர்க்கமோ நரகமோ அளிப்பது எமனுடைய வேலை. ஆனால் ஆண்டாள் திருவடி போற்றும் நாம் வினைப்பயன் நீங்கியவரானதால் எமனுக்கு அவ் வேலை இல்லை. பிறவா நிலை எனும் வீடு பேற்றினை நாம் அடையச் சென்று விடுவதால் எமன் நம்மை வந்தனம் செய்வான் என்கிறார் நாயகியார்.

ஹரி வந்து கொடுநெறி செய்வான்-'கொடுநெறி'-பகவான் விஷ்ணு மோட்ச சாம்ராஜ்யம் எனும் நிலையை நமக்கு ஈதலாக அளிப்பான் என்கிறார் சுவாமிகள்.

பிராகிருத மொழியான ஸௌராஷ்ட்ரீ மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட சுவாமிகளின் திருநாவில் செந்தமிழ் களிநடம்புரியும் காட்சியை இனிக் காண்போம்.

> மிடியாரிரு வினைகள் பொடியாம்
> மேலாமிடமேறப்படியாம்
> நெடியோனடி குடியாம் நீங்கா
> செல்வத்துக் கடியாம்.

மிடி-துன்பம்: துன்பம் தரும் இருவினைகள் தூள் தூளாகும் என்கிறார். மேலான இடம் ஆன விஷ்ணுவின் திருவடி அடைவதற்கு ஆண்டாள் திருவடி பக்திப் படியாகும். 'நெடியோன்' திருவடி என்பது நீங்காத செல்வம். நாம் பெற உதவும் அடித்தளமாகும். படி வாழ்வு-உலக வாழ்வு அனுபவிக்கும் வாழ்வு என்று அலையாதீர்கள். விஷ்ணுவின் அடியார்கள் மகிழும் வில்லிபுத்தூர் சென்று ஆண்டாள் திருவடி அடையுங்கள் என்கிறார் நாயகி சுவாமிகள். இன்பகவி பாடவருமானால் ஹிருதயம் ஒளிவுதயமாகும். திருப்பாவை எனும் அமுதத்தை நல்கிய கவிஞர் ஆண்டாள் அவரது திருவடி போற்றுவதால் நமக்கும் கவிபாடவரும் என்கிறார். இதற்கு நாயகி சுவாமிகளே சாக்ஷியாம். தொடக்க நிலை கல்வி பயல பள்ளி செல்லா நாயகியாரின் பாடல்கள் ஆய்வு செய்வதற்குரிய சொல்லாட்சி அமைந்தவைகளாக விளங்குவது ஆண்டாளின் திருவடி மகிமையன்றோ. மேலும் ஹிருதயத்தில் - இதயத்தில் ஒளி உதயமாகும் என்கிறார்.

> " வித்தமருளும் கைசேரும் வினையும்
> துன்பவினை தீரும்"

என்பது நாயகி சுவாமிகளின் திருவாக்கு. வித்தம்-ஞானம் நாம் பெறலாம்; துன்பங்கள் நம்மை நெருங்காமல் அழியும் என்கிறார் சுவாமிகள்.

> வடபத்ராரியர் அருள் பெறலாம்
> மலராள் சந்நதிக்கே பெறலாம்
> நடனகோபாலன் இருபை பெறலாம்
> நாயகியார் எனும் பேர் பெறலாம்.

என்பது நாயகி சுவாமிகள் முடிவாக கூறுவதாகும். நாயகி சுவாமிகளின் ஆசார்யராக விளங்கிய வடபதராரியராவார். ஆண்டாள் திருவடி அடைவதன்மூலம் ஆசார்யரின் அருளையும் பெறலாம் என்கிறார். மலராள்-தாமரை மலரில் வீற்றிருக்கும் மஹாலட்சுமியின் தரிசனத்தைப்பெறலாம். ஆண்டாளின்மூலம் நடன கோபாலனை கண்ணனின் கிருபை பெறலாம்' கண்ணனின் நாயகி எனும் திருப்பெயரும் நாம் பெறலாம் என்கிறார் நாயகி சுவாமிகள்.

இத்தகு பெரு நலன்கள் அளிக்க வல்லன ஆண்டாளின் திருவடிகள். அவைகளைபோற்றிப்பாடுவதும் அவள் உறையும் வில்லிப்புத்தூர் சென்று தரிசனம் பெறுவதும் நமது வாழ்க்கையில் நாம் நலம் பெற வழி வகுப்பதாகும். நாயகி சுவாமிகளின் அறிவுரைப்படி நாம் நடந்து இக, பர நலன் பெறுவோமாக.



# ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம்

श्रियःकान्ताय कल्याणनिधये निधयेऽर्थिनाम् ।
श्रीवेंकटनिवासाय श्रीनिवासाय मङ्गलम्  ॥ १ ॥

ஸ்ரீய: காந்தாய கல்யாண நிதயே நிதயோர்த்திநாம் |
ஸ்ரீ வேங்கட நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம் ||

பதவுரை:--ஸ்ரீய:காந்தாய=திருமகள் அன்பனும்; கல்யாண நிதயே=மங்களங்களுக்குப் புதையல் போன்றவனும்; அர்த்திநாம் நிதயே=யாசகர்களுக்குக் கருவூலம் போன்றவனும்; ஸ்ரீவேங்கட நிவாஸாய=திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருப்பவனுமாகிய; ஸ்ரீ நிவாஸாய=ஸ்ரீனிவாஸப் பெருமாளுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை:—திருவேங்கட மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும். ஒரு குறைவுமின்றி அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கும்வரை நாம் எல்லா மங்களங்களையும் அடைய முடியும். கோரிய பயன்களைக் குறைவின்றிப் பெற முடியும்.

लक्ष्मीसविभ्रमालोकसुभ्रूविभ्रमचक्षुषे ।
चक्षुषे सर्वलोकानां वेंकटेशाय मङ्गलम्  ॥ २ ॥

லக்ஷ்மீ ஸவிப்ரமாலோக ஸுப்ரூ விப்ரம சக்ஷுஷே |
சக்ஷுஷே ஸர்வலோகாநாம் வேங்கடேசாயமங்களம்||

பதவுரை:—லக்ஷ்மீ ஸவிப்ரம ஆலோக=திருமகளும் திகைத்து நோக்கக் கூடிய; ஸுப்ரூ விப்ரம சக்ஷுஷே=அழகிய புருவங்கள் நெறிந்த திருக்கண்களை உடையவனும்; ஸர்வ லோகாநாம்=எல்லா உலகங்களுக்கும்; சக்ஷுஷே=கண் போன்றவனும் ஆகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை.—கமலையும் கண்டு காமுறக் கூடிய கண்ணழகு படைத்த திருவேங்கடமுடையான் உண்மையில் உலகோர்க்குக் கண்ணாகவேயிருக்கின்றான். கண்ணிலையேல் உலகம் அழிந்துவிடும். ஆதலின் கடவுளர் கடவுளாகிய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

श्रीवेंकटाद्रिशृङ्गाग्रमङ्गलाभरणांघ्रये ।
मङ्गलानां निवासाय वेंकटेशाय मङ्गलम्  ॥ ३ ॥

ஸ்ரீ வேங்கடாத்ரி ச்ருங்காக்ர மங்களாபரணாங்க்ரயே |
மங்களாநாம் நிவாஸாய வேங்கடேசாய மங்களம் ||

பதவுரை:—ஸ்ரீ வேங்கட அத்ரி ச்ருங்க அக்ர=திருவேங்கட மலையின் சிகரத்திற்கு; மங்கள=மங்களத்தை உண்டு பண்ணுகிற; ஆபரண=அணியாக விளங்குகிற; அங்க்ரயே=திருவடிகளை உடையவனும்; மங்களாநாம் நிவாஸாய=மங்களங்களுக்கு உறைவிடமானவனும் ஆகிய; வேங்கட ஈசாய=திருவேங்கடமுடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை:—திருவேங்கடமுடையான் திருவடிகள் திருமலையின் சிகரத்திற்கே ஓர் அழகிய ஆபரணமாய் விளங்குகின்றன. திருமலைக்கே ஓர் திவ்ய சக்தியை அளிக்கின்றன. அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

सर्वावयवसौन्दर्यसंपदा सर्वचेतसाम् ।
सदा संमोहनायास्तु वेंकटेशाय मङ्गलम्  ॥ ४ ॥

ஸர்வாவயவ ஸௌந்தர்ய ஸம்பதா ஸர்வசேதஸாம் |
ஸதா ஸம்மோஹநாயாஸ்து வேங்கடேசாய மங்களம் ||

பதவுரை:—ஸர்வ அவயவ ஸௌந்தர்ய ஸம்பதா=எல்லா (ஒவ்வொரு) அவயவங்களின் அழகெனும் செல்வத்தினால்; ஸர்வ சேதஸாம்=எல்லோருடைய உள்ளங்களையும்; ஸதா=எப்பொழுதும்; ஸம்மோஹநாய=மயக்குகின்றவனாகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை:— திருவேங்கட முடையான் திருமேனியின் திருவழகைக் கண்டு மயங்காதார் இல்லை. ஆண் பெண் வேற்றுமையின்றி அனைவரும் அவனழகில் மயங்கியவரே. கண்ணெச்சிலின்றி அக்கடவுளுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

नित्याय निरवद्याय सत्यानन्दचिदात्मने ।
सर्वान्तरात्मने श्रीमद्वेंकटेशाय मङ्गलम्  ॥ ५ ॥

நித்யாய நிரவத்யாய ஸத்யாநந்தசிதாத்மநே|
ஸர்வாந்த ராத்மநே ஶ்ரீமத் வேங்கடேசாய மங்களம் ||

பதவுரை :—நித்யாய=அழிவற்றவனும்; நிரவத்யாய=குற்ற மற்றவனும்; ஸத்ய ஆநந்த சித் ஆத்மநே=நிர்விகாரனும் ஆநந்த ஸ்வரூபனும் ஞாநஸ்வரூபனும் ஆகிய; ஶ்ரீமத் வேங்கட ஈசாய=ஶ்ரீ திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை :—ஸத்யத்வம் ஜ்ஞாநத்வம் அநந்தத்வம் அமலத்வம் ஆநந்தத்வம் என்ற ஐந்து குணங்களுடன் கூடியதாக உபநிஷத்துக்களில் கூறப்படும் பரப்ரஹ்மமே திருவேங்கட முடையான் எல்லாருள்ளத்துள்ளும் உறைந்து நிற்கும் கடவுளே திருவேங்கட முடையான். அவனுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

स्वतस्सर्वविदे सर्वशक्तये सर्वशेषिणे ।
सुलभाय सुशीलाय वेंकटेशाय मङ्गलम् ॥ ६ ॥

ஸ்வதஸ்ஸர்வவிதே ஸர்வ சக்தயே ஸர்வசேஷிணே |
ஸுலபாய ஸுசீலாய வேங்கடேசாய மங்களம் ||

பதவுரை :—ஸ்வத:=தானாகவே (பிறர் உதவியின்றியே) ஸர்வவிதே=எல்லாம் அறிந்தவனும்; ஸர்வ சக்தயே=எல்லா(வற்றிலும்) சக்தி(யும்) உடையவனும்; ஸர்வ சேஷிணே=எல்லாவற்றிற்கும் தலைவனும்; ஸுலபாய=எளிதில் அடையப்படக்கூடியவனும்; ஸுசீலாய=நல்லொழுக்கம் (எளியவரிடத்து இசைந்து நெருங்கிப் பழகும் தன்மை) உடையவனும் ஆகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை :—எம்பெருமான் இயற்கையில் எல்லாம் வல்லவன். எல்லோருக்கும் இறைவன். ஆயினும் தன் பெருமையை மறந்து எளியவரிடத்து இசைந்து பழகுவான். (எளியவர் தன்னை யணுகிப் பழக இடமளிப்பான்.) அத்தகைய பரம்பொருளுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

परस्मै ब्रह्मणे पूर्णकामाय परमात्मने ।
प्रयुजे परतत्त्वाय वेंकटेशाय मङ्गलम् ॥ ७ ॥

பரஸ்மை ப்ரஹ்மணேபூர்ண காமாய பரமாத்மநே |
ப்ரயுஜே பரதத்வாய வேங்கடேசாய மங்களம் ||

பதவுரை :—பரஸ்மை ப்ரஹ்மணே=பரம்பொருளும்; பூர்ணகாமாய=விருப்பங்கள் எல்லாம் நிறைவேறக் கூடியவனும்; பரம ஆத்மநே=பரமாத்மாவும்; ப்ரயுஜே=(எல்லாவற்றையும் தம் தம் பணிகளில்) ஏவுபவனும்; பரதத்வாய=உண்மைப் பொருள் அனைத்திலும் உயர்ந்தவனும் ஆகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை :—உபநிஷத்துக்கள் எங்கெங்கு 'பரம் ப்ரஹ்ம' என்ற சொல்லை உபயோகிக்கின்றனவோ அங்கங்கு திருமாலை (திருவேங்கட முடையானை)க் கருத்தில் கொண்டே அவ்வாறு கூறுகின்றன. அவன் விரும்பி அடைய முடியாதது உலகத்தில் இல்லை. உலகத்தில் உள்ள ஒவ்வொன்றும் அவன் திருவாணையைப் பின்பற்றியே தன் தன் காரியங்களைச் செய்ய முடியும். அவன் ஆணையின்றி அணுவும் அசையாது. அத்தகைய திருவேங்கட முடையானுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

1. 'ப்ரயுஞ்ஜே' என்ற பாடம் பல விடங்களில் காணப்படுகின்றது. அப்பொழுது 'மங்களம்' என்ற சொல்லை இரண்டாம் வேற்றுமையாக்கி மங்களத்தை என்று பொருள் சொல்லி 'ப்ரயுஞ்ஜே' என்பதை வினையாக்கிக் 'கூறுகிறேன்' என்ற பொருளைக் கூறிக் கொள்ளவும்.

आकालतत्त्वमश्रान्तमात्मनामनुपश्यताम् ।
अतृप्त्यमृतरूपाय वेंकटेशाय मङ्गलम् ॥ ८ ॥

ஆகால தத்வ மச்ராந்த மாத்மநா மநுபச்யதாம் |
அத்ருப்த்யம்ருதரூபாய வேங்கடேசாய மங்களம் ||

பதவுரை :—ஆகால தத்வம்=காலமுள்ளளவும்; அச்ராந்தம்=களைப்பின்றி (இடைவிடாது); அநுபச்யதாம்=ஸேவிக்கின்ற; ஆத்ம நாம்=பக்த ஜீவர்களுக்கு; அத்ருப்தி அம்ருத ரூபாய=ஆராவமுதமாயிருப்பவனாகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.

கருத்துரை :—திருவேங்கட முடையானுடைய திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்திலும் திவ்யாத்மஸ்வரூபத்திலும் திவ்யகுணங்களிலும் ஈடுபட்டு அனுபவிப்பவர்களில் போதுமென்று திருப்தி யடைந்தவர் இதுவரை இருந்ததில்லை. இப்பொழுதும் இல்லை. இனியும் இருக்க முடியாது. அத்தகைய திருவேங்கட முடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

(தொடரும்)

# தத்தாத்திரேயர் அறிந்தேற்ற அறுநான்கு ஆசான்கள்

வைகுந்தம் செல்ல கண்ணன் கருதியுள்ளமையறிந்த உத்தவன் 'நின்னைப் பிரிந்து ஒரு சிறிதும் என்னால் இருக்கவியலாது. என்னையும் உடன்கொண்டு செல்க' என வேண்டினான். உத்தவன் மனங்கொள்ளுமாறு கண்ணன் தத்துவம் உரைக்கலுற்றான். அப்போது கண்ணன் "காட்சியறிவாலும் அனுமானஅறிவாலும் எண்ணித் தெளிவு பெற்றுத் துன்பங்கள் இவையென்றும், நற்குணங்கள் இவையென்றும் அறிதல் ஒழித்து யாவும் சமம்' எனக் காணல் வேண்டும்" என்றான். 'நின் பிரிவிற்கஞ்சினன், குருவை நீங்கிக் காட்சியாலும் அனுமானத்தாலும் நன்மையை உள்ளம் தெளிதல் எவ்வாறு? கூறியருள்க' என உத்தவன் வேண்டக் கண்ணன் உத்தவனுக்குக் கதையொன்று உரைக்கலானான்.

பாகவதம் பகவான் திருமாலின் அவதாரம் இருபத்திரண்டெனக் கூறும். அவற்றுள் தத்தாத்திரேயன் அவதாரமும் ஒன்றாகும். விண்ணவர் போற்ற அத்திரி முனிவர்க்கு அந

திரு. ச. கறுப்பையா, M.A., M.B.L.,
இராமநாதபுரம்.

சூயையிடம் தோன்றியவர் தத்தாத்திரேயர். இவர் குவலயாசுவன் எனும் சூரியவம்சத்து அரசனுடைய மகன் அலர்க்கனுக்கும், பிரகலாதனுக்கும் 'ஆன்வீக்ஷிகி' என்ற தத்துவநூலை உபதேசித்தருளினார்.

யயாதியின் மகன் யது என்பான் தீதிலராகி மகிழும், நிர்வாணவேடம் பூண்ட தத்தாத்திரயரை அணுகி "அறம், பொன், காமம் சிறிதும் நினைந்திலை; எதனால் நீ இன்பம் அடைகின்றாய்?" என வினவத் தத்தாத்திரேயர் இசைக்கலுற்றார்.

'நிலம், நீர், தீ, காற்று, வானம், கதிரவன், திங்கள், கடல், மலைப் பாம்பு, மான், யானை, விட்டிற்பூச்சி, மீன், வண்டு, கணைசெய்வான் கன்னி, தேனீ, புறு, வேசி, அன்றில், நாகம், சிலந்தி, குளவியால் எடுக்கப்பட்ட புழு, சிறுவன் ஆகிய இருபத்து நான்கினையும் மனத்தில் ஆசிரியர் எனக் கொண்டு தீது, நன்று என்று அறிந்தனன், இன்பமுற்றேன். அரசே! அவ்வகை கேட்பாயாக' எனத் தொடர்ந்தார் தத்தாத்திரேயர்.

வெட்டினாலும் தோண்டினாலும் பொறுத்துக்கொண்டு எதிர்-பொருடாது மலைவீழ் அருவி காடு தரும் கனி முதலியன அளித்தல் ஆகிய இருதிறத்தையும் நிலம் எனக்கு அறிவித்தது.

['அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை'
(குறள். 151)

என்றார் வள்ளுவரும்.] புனிதம்பெற ஆக்கலும், தெளிவும் நீரினிடத்து அறிந்தேன். தன்னை அடைந்தவற்றைப் புசிப்பதும், எவரும் அணுகாவனம் வீற்றிருப்பதும், நல்ஒளியும் தீ எனக்குக் கற்பித்தது. தவத்தோர்க்கு விருப்பும் வெறுப்புமில்லை; அதுபோலக் காற்றும் துர்நாற்றமும் நறுமணமும் கலந்து வீசியும் காற்று அக்குணங்களைப் பெறாது என்றறிந்தேன்.

பிரமம் ஒன்றென வானம் எனக்கு உணர்த்திற்று. உருவமற்ற பிரமம் சரீரம் யாவற்றிலும் உறைகுவன் என்பதைப் பல குடத்து நீரிலெல்லாம் கதிரவன் ஒருவனே நிழல் பல வாயுறல் கொண்டு அறிந்தேன்.

வளர்தல் தேய்தல் நிலவுக்கில்லை; கிரணங்களுக்கே உண்டு. அது போன்று ஆதல், இருத்தல், மாற்றமடைதல், குறைதல், வளர்தல், அழிதல் ஆகிய ஆறுவகை விகாரங்களும் உடலுக்கல்லால் உயிர்க்கில்லை என்பது உணர்ந்தேன். நிலவிற் களங்கமின்று; அது பூமியின் நிழலே, அது போன்று உடல் மேவும் குணங்கள் உடலுக்கேயன்றி மெய்ப்பொருளாம் உயிர்க்கில்லை. அதனை, 'திங்கள் நாடொறும் வளர்தலுந் தேய்தலுந் தெரிக்கின் அங்கண் மாநிலம் விளங்கு வெண் கதிர்க்குண மதனால், தங்கும் ஓராறு வகைவிகாரங்களும் தமியேன், இங்கு நாடினன் உடற்கலால் உயிர்க்கிலை எனவே!' (செவ்வைச் சூடுவார் பாகவதம்-4387) எனும் பாடலால் அறியலாம்.

வேற்றுநீர் வரவால் தன் குணம் மாறாதிருக்கும் கடலின் கம்பீரத்தை, யது அரசே! யானும் உவந்து ஏற்றேன். முயன்று வருந்தாமல் தன் பக்கல் அடைந்ததை உண்ணும் மலைப் பாம்புபோல யானும் முயற்சியற்றுப் பெற்றன அருந்தினன்.

உரோமபதன் எனும் அங்கதேசத்தரசன் ஒரு சமயம் அந்தணரைப் பகைத்தமையால் அவன் நாட்டில் மழை பெய்யாமல் வறட்சி ஏற்பட்டது. கலைக்கோட்டு முனிவர் (இருசிக சிங்கர்) தன் நாட்டிற்கு வந்தால் மழை பெய்யும் என அறிந்த அரசன் முனிவரை அழைத்துவர வேசியரை அனுப்பினான். வேசி மகளின் அழகிலும் இசையிலும் மனதைப்பறிகொடுத்த முனிவர் அவளை மணக்கும் ஆசையால் வேசியர் வேண்ட உரோமபதன் நாட்டிற்கு வந்தார். மழையும் பெய்து வறட்சி நீங்கிற்று. மனம் மகிழ்ந்த உரோமபதன், முனிவர் மயங்கிய, தனக்கு வேசியிடம் பிறந்த பருவக்குமரியை மணம் முடித்துத் தராமல், தன் வளர்ப்பு

மகளாகிய சாந்தையை மணம்முடித்துக் கொடுத்தான். கலைக்கோட்டு முனிவர் இவ்வாறு வஞ்சிக்கப்பட்டார். கானம் கேட்டுக் கலைக்கோட்டு முனிவன் அயர்ந்ததை அறியாத மான்கள் வேட்டுவனது பண் செவிமடுத்து அவன் விரித்த வலை வீழ்ந்து மடிந்தன. அதுகண்ட யான் திருமாலின் நாமகீர்த்தனம் தவிர ஏனைய வெவ்விசை கேளேன்.

குழியில் பிடியை வைத்துக் களிற்றைப் பிடிப்பர் வேட்டுவர். மாதர் இன்பத்தை அது கண்டு விடுத்தேன். உணவுப் பொருளோ எனக் கருதி விளக்கின் தீயைச் சுற்றிய விட்டிற் பூச்சி அத்தீயில் விழுந்து இறக்கும். முனிவராயினும் அவர்தமையும் கவர்ந்து வருத்தும் மடந்தையர் உருவை யான் காண்பதிலன்.

வஞ்சத்துடன் தூண்டிலிற் கட்டிய உணவைச் சுவை கருதி உண்ணக் கருதிய மீன் இறப்பதைக் கண்டு யான், உடற்கூட்டில் உயிர் தங்கவும் பசி போக்கவும் அருந்தலின்றிச் சுவைக்காக உணவருந்தலை நீங்கினேன்.

சிறுசிறு மலர்தொறும் சென்று தேன் பருகி மகிழும் வண்டைப் பார்த்து யானும் கலத்தால் ஐயம் ஏற்றுண்ணுமல் கரத்தால் ஐயமேற்று உண்டனன். இக்கருத்து,

"வண்டினம் சிறிதுசிறிதென அலரும்
மலர்தொறும் வருமுருகு உவப்பால்
உண்டன திரிதல் கண்டனன் யானும்
உரைக்கின் இத்தொழிலமு கிதென
எண்டரு நகரின் மனைதொறும் குறுகி
எனதொரு கரமிசை ஐயம்
கொண்டனன் சிறிது சிறிதென
உவந்து
கொள்கலத்து ஏற்றிடாது அன்றே."

(செவ்வைச்சூடுவார்பாகவதம்-4395)

என்ற பாடலாற் புலப்படும். ஒரு தாமரைப் பூவிலேயே தேனுண்டு அம்மலரில் உறைய, இதழ்குவிய உள் அகப்பட்டு மடியும் வண்டினைக் கண்ட யான், அன்று முதல் ஒரே வீட்டில்

தங்கிச் சுவையுணவை விரும்பி அருந்தலேன்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்து குணங்களும் ஒருங்கே அடைந்தார் உய்ந்திலர். பொறிவழி நில்லாது அவற்றை அடக்கி, அம்பு செய்து அதன் கோணலைத் திருத்தி ஆளும் ஒருவனைப் போலப் புலன்வழி மனம் விரும்புதலை விடுத்துக் கருத்தால் அசைவில்லாத அறிவாம் பொருள் அறிந்தேன். அறிவின் (இலக்கணமாக வள்ளுவரும்,

**'சென்ற விடத்தாற் செலவிடா தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்ப தறிவு'**

*(குறள்-422)*

எனக் கூறினர்.)

தன் திருமணம் பொருட்டுத் தாயும் தந்தையும் வேற்றூர் சென்ற நாளில், உறவினர்க்கு உணவருத்தல் வேண்டி ஒரு பெண் நெல்லைக் குற்றத் துணிந்தாள். வளையோசை அவ்வுறவினர் கேட்பின் வறுமையுற்றவள் என்று தன்னை அவர் பழிக்கக்கூடும் என உணர்ந்து அவள் கைவளை கழற்றிப் பின் நெல் குற்றினள். அதனால் வெவ்வுரை கருதி யான் தவசியர் குழுவைக் கடிந்தேன். இதனை,

**"பெரிய கைவளை யார்ப்பவர் கேட்கினிப் பேதை**
**உரைசெய் நல்குரவு உற்றவள் என்ப ரென் றுணர்ந்தாங்கு**
**அரிய கைவளை கழற்றினள் நெல்லு வைத்ததனால்**
**கருதும் வெவ்வுரைவருங்கொலென்று உறுங்குழுக் கடிந்தேன்."**

*(செவ்வைச்சூடுவார்பாகவதம் 4400)*

என்ற பாடலால் அறியலாம்.

உண்ணுமற் சேர்த்து வைத்த தேனைத் தேன் எடுப்பார் ஒரு செயலும் செய்யாமற் கவர்ந்தனர். தேனீக்களும் இறந்தன. அது கண்ட யான், ஆசை நீக்கியவர்க்கு நாளைக்கென்று சேர்த்து வைப்பது மிகையெனத் தெளிந்தேன். வேட்டுவன் வலைப் பட்ட பெடையும் குஞ்சுகளும் அடைந்த துயர்கண்ட ஆண்புறா தானும் சென்று வலையை அடைந்து இறந்தொழிந்தது. அதனால் தமர் நட்பு, தீங்கு பயக்குமென அறிந்த யான் தமரொடு சேர்தலை ஒழிந்தேன்.

மிதிலா நகரத்து வேசி பிங்கலை என்பவள் வேட்கை நீங்குதல் நன்றெனக் கூறித் தமக்குக் குருவானமை தத்தாத்திரேயர் கூறலுற்றார். "பிங்கலை புணர்ச்சி இன்பம் விற்கும் விரகினள்; பொருள் நல்கும் ஆடவரைப் புணர்வாழ்க்கையாள். இவ்வாறு அவள் பொருளீட்டும் நாளில், சொன்னவண்ணம் பொருள் தந்து தோய்பவர் ஒருவரும் வாராமையால் அரைவராகன் எடையுள்ள பொன்னும் அவளுக்குக் கிடைத்திலது. பிங்கலை மிகவும் வருந்தினள். யாரானும் வந்து பொருள் கொடுத்து இன்பந் துய்த்துப் போகமாட்டார்களா என வீதி பார்த்துத் தேம்பினள். வாசலில் நின்று மயங்குவாள்; மறுகுவாள். நள்ளிரவு ஆயிற்றே என்று உள்ளே செல்வாள். பொருள் நினைந்தழுவாள். பாயல்மீது படுப்பாள்; பதைப்பாள்; பொருள்மீது கொண்ட ஆசை பொல்லாதது என்று அவள் கருதி வெறுத்தவளாய்க் கூறுவாள்: 'துயரம் நீங்காது ஆசை வளராவாறு வைராக்கியம் எனும் வாள்கொண்டு வெட்டிடாது உயர்ந்தோர்க்கு உவகை உண்டாகாது, கடவுள் என்னுள் தங்கி எனக்கு அறிவினை வழங்கி வதியவும், என் ஆசையில் வீழ்பவரை வீதியில் தேர்ந்து என்னைப்போல் அயர்வார் எவர் உண்டு? மேலும், சலத்தையும் தசை எலும்பொடு சாற்றும் மும்மலத்தையும் மயிர்த்தோலின் மறைத்த உடலை அழகுடைத்து என நயந்து நலிந்த என் அறிவை என்னென்று சொல்ல!' எனக் கூறிய பிங்கலை முடிவில்லா ஆசையை விட்டொழித்து மகிழ்ந்தாள். அன்று முதல் யானும் அவ்வகை தெளிந்து ஆசையை வேரொடும் களைந்தேன்.

ஒரு நாள் ஓர் அன்றிற்பறவை ஊன் கவர்ந்து வானிற் சென்றபோது மற்றொரு பறவை துரத்தி அவ்வூனைப் பறித்ததும், அன்றிற்பறவை ஊன் ஒழிந்து உவப்புற்றது. அதனால் யான் என்றும் ஒரு பொருள் எய்தி அதனால் இடர் அடைந்திலேன். கறையான் முயன்று கட்டிய புற்றில் பாம்பு சென்று உறையும். அதுகண்டு உணர்ந்த யான் ஒன்றும் உருற்றேன்; மற்றவர் புத்தியாகிய குகையில் வைகுவேன்.

தான் உண்டாக்கிய நூலைத் தானே உண்ணும் சிலந்திப் பூச்சியைக் கண்ட யான், உயிர்களைப் படைக்கும் அப்பரம்பொருளே அவ்வுயிர்களை உண்ணும் என்பது அறிந்தேன். மானம், அவமானம் அடைந்திடாது ஊனம் நீக்கி உவந்த சிறுவனைக் கண்டு யான் அறிந்து கொண்டதால், சிறுவன் தன் மைகளை எய்தி யானும் மகிழ்ச்சியுற்றேன். வண்டை நினைந்த பசும்புழு வண்டு உருவாகியது கண்டு, யான் உயிரானது அன்பாலும், ஆசையாலும், பயத்தாலும், பகையாலும் நாதனையே நினைந்து இன்பமெய்தும் என்பதை அறிந்தேன்.

சொல்லுக்கடங்காது எங்கும் நிறைந்துள்ள இறைவனும் திருமாலை அறிதற்கு இடமாக இவ்வுடல் இருத்தலின் உடலும் எனக்குக் குருவாகியது அரசே! சடப்பொருள் அனைத்தும் படைத்து உவக்காத நான்முகன் மனிதனைப் படைத்து மகிழ்வெய்தினன். மானிடப்பேறு மிக அரிதானது. ஆயினும், சினந்த யமனது கைப்பட்டிருக்குமென ஆராய்ந்து ஒழுக்கத்துடன் விளங்குதல் நன்றாம். உறக்கம் விழிப்பு போன்று, பிறந்த உடல் இறத்தல் உண்மை; சிறப்போடு இறக்கும் உடலம் மீட்டும் பிறத்தல் உண்டாகலின், உடலின்மீதுள்ள விருப்பை நீக்கல் வேண்டும்." இவ்வுண்மை,

**"உறக்க மும்விழிப் பும்உறு தன்மை போல்**
**பிறக்கும் யாக்கையி றத்தன்மெய் பெட்பொடும்**
**இறக்கும் யாக்கையு மேய்ந்துபி றத்தலின்**
**துறக்க வேண்டுமெய் யாசையைச் சூழ்ச்சியோய்."**

*(செவ்வைச்சூடுவார்பாகவதம் 4423)*

என்ற பாடலால் அறியத் தகும்.

இவ்வாறு யது என்னும் மன்னனுக்கு அத்திரியின் புதல்வரும் தவத்திற் சிறந்த வருமாகிய தத்தாத்திரேயர் தாம் அறிந்தேற்ற அறுநான்கு ஆசான்கள் பற்றிச் செப்பினர் என்று உத்தவனுக்கு மாயன் உரைத்தான்.

இறைவன் படைத்துள்ள எச்சிறு பொருளிடத்தும் நாமும் கூர்த்தமதி கொண்டு பாடம் கற்று உய்வோமாக.

★

# சங்கீத மும்மணிகள்

1. ஸ்ரீ சியாம சாஸ்திரி :
வாழ்க்கை : 1762—1827.

தஞ்சை மாவட்டம் திருவாரூரில் 26-4-1762ல் சித்திரபானு, சித்திரை 17-ம் தேதி கிருத்திகை நட்சத்திரத்தில் ஜனனம். தமிழ் பிராமணர் குலம். இயற்பெயர் வெங்கட சுப்பிரமணியம். (கிருத்திகை நட்சத்திரமானதால் அப்பெயர் சூட்டப்பட்டது). எனினும் சியாம கிருஷ்ணு என்றே அழைக்கப்பட்டு வந்தார். எனவே இப்பெயரே நிலைத்துவிட்டது. இவருடைய கீர்த்தனைகளில் 'சியாம கிருஷ்ணு' என்ற முத்திரைவிளங்குவதைக் காணலாம். மதுரை ஸ்ரீ மீனுக்ஷி 'நவரத்தின மாலிகா' என்ற கீர்த்தனைகள் முதன் முதலாகப் பாடப்பட்டவையாகும்.

ஸ்ரீ சுப்பராய சாஸ்திரி, தரங்கம் பாடிபஞ்சநாதய்யர், அல்ஸூர் கிருஷ்ணய்யர், பெரம்பூர் கிருஷ்ணய்யர், சங்கீதஸ்வாமிகள், தாஸரி முதலானேரே இவருடைய சிஷ்யர்களாவர்,

வ்யவருஷம் தை மாதம் 26ம் தேதி தசமி திதியில் (6-2-1827) அழியாப் பெயரையும் புகழையும் நிலைநாட்டி, சித்தியடைந்தார்.

2. தியாகராஜர் :
வாழ்க்கை : 1767—1847.

தஞ்சை மாவட்டம் திருவாரூரில், 4.5.1767ல் சர்வஜித்,சித்திரை 25-ம் தேதி புஷ்ய நக்ஷத்திரத்தில் கடக லக்னத்தில் ஜனித்தார். தந்தை ராமப்பிரம்மம் என்பவர். ஸ்ரீ ராம பிரானின் கல்யாண குணங்களை ரசித்து உள்ளமுருகி ஸதா ஸ்ரீ ராமனின் சிந்தையாகவே யிருந்து வந்த போது'ஹரிதாஸ்'என்றோர்சந்நியாஸி அவர் முன்தோன்றி ஸ்ரீராம நாமத்தை 96 கோடி ஜபிக்குமாறு கூறி மறைந்துவிட்டார்.

தம்மையும் மறந்து, இந்த மாயப் பிரபஞ்சத்தையும் மறந்து உறுதியான பக்தியுடனும் திடமான நம்பிக்கையுடனும் ஸ்ரீ ராமசந்திரப்ரபுவின் திருவடிகளே பற்றுக்கோடாகக் கருதி அயராமல், இடைவிடாமல் ஸ்ரீ ராமனை ஆராதித்து, 96 கோடி தாரகமந்த்ரமான ஸ்ரீ ராமநமத்தை ஜபிக்கவும், தன் பூஜையறையில் படத்திலிருக்கின்ற மூர்த்திகள் போலவே, ஸீதா பிராட்டியுடனும் இளையபெருமாளான லக்ஷ்மணருடனும் பரமபாவன க்ருபாஸாகர பெருமாளாக ஸ்ரீ ராமபிரான் தோன்றி திவ்ய தரிசனமருளிச் செய்தார்.

தியாகராஜரின் முதல் கீர்த்தனை 'தொருகுணு இடுவண்டி சேவா' என்ற பிலஹரி ராகத்தில் இயற்றப் பட்டதாகும். ஸ்ரீராமபிரானை தரிசித்ததும் 'பாலகனகமய' என்ற அடாணு ராகக் கீர்த்தனை அருளிச் செய்யப்பட்டது. அவரருளிச் செய்த கடைசிப் பாட்டு 'சியாம சுந்தராங்க' என்ற தன்யாசி ராகக் கீர்த்தனையாகும்.

தியாகப்ரம்மம் பிரபவ ஆண்டு மார்கழி மாதம் 24 ஆம் தேதி புஷ்ய பகுள பஞ்சமி தினத்தில் (6–1–1847) ஸ்ரீ ராமபிரானின் திருவடிகளையடைந்தார்.

3. முத்துஸ்வாமி தீக்ஷிதர் :
வாழ்க்கை : 1776—1835.

தஞ்சை மாவட்டம் திருவாரூரில் 24–3–1776ல் மன்மத வருஷம் பங்குனி மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் ஸ்ரீ ராமஸ்வாமி தீக்ஷிதரின் அருந்தவப் புதல்வராக ஜனனம். திருத்தணியில் முருகப்பெருமான் ஒரு மகா புருஷராக இவர் கனவில் தோன்றி, வாயைத் திறக்கச்சொல்லி ஒரு கற்கண்டைப் போட்டார். எனவே குகனை (ஸ்ரீ முருகப் பெருமானை)யே குருவாகக் கொண்டு, அது முதல் 'குருகுஹ' என்ற முத்திரையை அமைத்துக் கொள்ளலானுர், 'ஸ்ரீ நாதாதி குருகுஹ' என்ற மாயா மாளவ ராகக் கீர்த்தனையே இவர் முதல் கீர்த்தனையாகும். 'ஆனந்தாம்ருதவர்ஷிணி' என்ற கீர்த்தனை கடைசிக் கீர்த்தனையாகும். அம்ருதவர்ஷிணிராகத்திலமையப்பெற்றுள்ளது.

சுத்த மிருதங்கத்தம்பியப்பா, சின்னய்யா, பொன்னய்யா, வடிவேலு, திருக்கடையூர் பாரதி முதலானேர் அவரது சிஷ்யர்களாவர். ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் மறைந்த நாள் 21–10–1835 ஆகும்.

திரு. எம். எஸ். பாலசுப்பிரமணியம்
சென்னை.





# பொங்கல் திருநாள்

டாக்டர். கோவி. நரசிம்மன்,
*திருப்பதி*.

நீண்ட காலமாகத் தமிழகத்தில் கொண்டாடும் விழாக்களில் பொங்கல் விழாவும் ஒன்றாகும். இதனை உழவரின் மகிழ்ச்சி பொங்கும் விழா என்பர். பொங்கல் விழா நான்கு நாட்கள் கொண்டாடப்படுகிறது. முதல் நாள் விழா போகிப் பண்டிகை ஆகும். இது இந்திரனுக்கு உரியது. இரண்டாம் நாள் விழா பொங்கல். இது உழவிற்கு உதவிய சூரியக் கடவுளுக்குக் கொண்டாடப்படுவதாகும். மூன்றாவது நாள் மாட்டுப் பொங்கலாகும். இது உழவிற்குப் பயன்பட்ட மாடுகளுக்கு நன்றி செலுத்தும் வகையில் அமைவது. நான்காவது நாள் காணும் பொங்கல் அல்லது கன்னிப் பொங்கல் என்று அழைப்பதாகும். மக்கள், இந்நாளில் விளையாட்டுகள், பொழுது போக்குகள் ஆகியனவற்றில் ஈடுபட்டு மகிழ்ச்சியில் திளைப்பர்.

**போகிப் பண்டிகை :**

'போகி' எனும் சொல்லிற்கு 'மகிழ்ச்சி' என்பது பொருள். ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை நெல் பயிரிடும் காலமாகும். உழவர்கள் மழையின் உதவியால் கழனியில் இரவும் பகலும் இடைவிடாது உழைத்து, உழைப்பின் பயனை மார்கழி இறுதி நாளில் வீட்டிற்கு நெல் மணியாகக் கொண்டு வருவர். இது தவிர குறுகிய காலப் பயிர்களான அவரை, துவரை காய்கறிகள் முதலியனவும் மார்கழி மாத இறுதியில் வீட்டிற்கு வந்து சேரும். சுற்றமும் நட்பும் சூழ மனைவி மக்களுடன் உழவர்கள் மகிழ்ச்சியாக இருப்பர். இதனால் இதற்குப் போகிப் பண்டிகை என்ற பெயர் வந்திருக்கலாம். கண்ணபிரானும் பகவத் கீதையில்,

"மாஸானாம் மார்கசீர்ஷோऽஹம்
ருதூனாம் குஸுமாகர"
(*கீதை. 10.35*)

என்கிறார். அதாவது மாதங்களிலே நான் மார்கழியாக விளங்குகிறேன் என்கிறார். இந்திரனுக்குப் 'போகி' என்று பெயர். மார்கழி மாத இறுதி நாள் இந்திரனுக்கு விழா கொண்டாடப்படுவதால் போகிப் பண்டிகை எனும் பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

போகியன்று குழந்தைகளும் பெரியவர்களும் விடியற்காலத்தில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பர்; புத்தாடை உடுத்திக் கொள்வர். பழையதும் பயனற்றப் பொருட்களுமான பாய், துடைப்பம், முறம், கூடை முதலியனவற்றை வீட்டின் முன்னர் இட்டுத் தீயிட்டுக் கொளுத்துவர். சிறுவர்கள் தீயினைச் சுற்றி நின்று மேளம் அடித்து மகிழ்வர்.

போகிப் பண்டிகையன்று வீடுகளுக்கு அழகிய கோலமிட்டும் தோரணங்கள் கட்டியும் அழகு செய்வர். நண்பகல் வேளையில் இந்திரனுக்கு உணவு படைத்து மஞ்சள் கொத்துக்களை வைத்து, ஐந்து முக குத்து

# திருவிண்ணகரம் காண வாரீர்!

கேசவன்-மாலவன் - கேடகற்றும் தூயவன்
கேட்ட வரமளிக்கும் - கேயூரனைக் காண வாரீர்!

நாரணன் நம்மவன் - நான் வேத வித்தகன்
நாதாந்த நாயகனை - நாள்தோறும் பணிய வாரீர்!

மாதவன் மன்னவன் - மாமலை நித்ய வாஸன்
மாறுது அருள்சுரக்கும் - மாயவனைக் காண வாரீர்!

கோவிந்தன் கோலஎழில் - கோடி சூர்யப் பிரகாசன்
கோயில் கொண்ட மாமலை - கோவர்த்தனகிரி காண வாரீர்!

விஷ்ணுவே விண்ணளந்தான் - வினைதீர்க்கும் வித்தகன்
விதிமாற்றம் கண்டிடவே - விண்ணகரம் காண வாரீர்!

மதுசூதனன் மண்ணளந்தான்-மனஇருள் அகற்றும் தூயன்
மங்காத ஒளிவிளக்கை - மலைமீதே காண வாரீர்!

திருவிக்கிரனும் திருமாலை - தித்திக்கும் இன்னமுதை
தினம்தினம் துதிப்பதற்கே - திருமலைமீது வாரீர்!

வாமனனுய வாசுதேவன் - வானவர் போற்றும் தேயன்
வானவர்கோன் அடிபணிய - வான்மலை மீதேறி வாரீர்!

ஸ்ரீதரனுய ஸ்ரீநிவாஸன் - ஸ்ரீ வைகுண்டத்தரசன்
ஸ்ரீயப்பதியை வணங்க - ஸ்ரீகிரியின்மீது வாரீர்!

இருடீகேசன் தாள்பணிந்தே - இடர்களைக் களைந்தெறிந்து
இம்மையில் சுகம்நல்கும் - இணையிலா ஏழுமலை ஏறி வாரீர்!

பத்மனுபனுய பரந்தாமன் - பணிந்தோரைக் காக்கும் சீலன்
பதமலர்கள் பணிந்திடவே - பண்மலை மீதேறி வாரீர்!

தாமோதரனுய தாரணிவேந்தன் - தாமரைக் கண்ணனவன்
தாள்மலர் பணிந்திடவே-தாழாதுயர்ந்த திருவேங்கடமேறி
வாரீர்!

பன்னிரு நாமப் பரந்தாமன் - பரமபதநாதனடி பற்றிடவே
பக்தியுடன் திருமலைப்படியேறி - பங்கய வண்ணனவன்
வேங்கடவன்

பளிங்கு நிறத்தனன் பதம்பற்றி - பண்பில் உயர்ந்தே
வாழ்ந்திடுவோம்
பக்திக்குறுதுணை பெற்றிடுவோம்!

—தேவி தாஸன்-மதுராந்தகம்.

விளக்குகளை ஏற்றி இருபுறம் வைத்து வழிபடுவர். பின்னர் அவ்வுணவினை அனைவருக்கும் பகிர்ந்து கொடுப்பர்.

அன்று மாலை உழவுத் தொழிலுக்கு உதவிய தச்சர், கொல்லர், துப்புரவு செய்வோர், ஊர்க்காவலர் முதலியோருக்கு அறுவடை செய்த புதிய நெல்லையும், வெல்லக் கட்டிகளையும், கரும்புகளையும் நிலச்சுவான்தார் பரிசாக அளிப்பர்

இப்போகிப் பண்டிகையோடு கிருஷ்ண அவதாரத்தையும் புராணங்கள் தொடர்புபடுத்திப் பேசுகின்றன. ஆண்டுதோறும் மழைக் கடவுளான இந்திரனுக்குப் பொங்கல் இட்டுப் படைத்து நன்றாக மழை வேண்டி மக்கள் வழிபடுவர். திருமால் கண்ணனாக அவதரித்த போது இந்திரனை வழிபட வேண்டாம் என ஆயர்களைத் தடுத்து நிறுத்தினர். இதைக் கண்ட இந்திரன் கல் மழை பெய்வித்து ஆயர்களையும் ஆக்களையும் துன்புறுத்தினன். கண்ணன் கோவர்த்தன மலையை குடையாகப் பிடித்து ஆயர்களையும் ஆக்களையும் காத்தருளினர். தன் ஆற்றல் பயனற்றுப் போனதால் இந்திரன் கண்ணபிரானை வணங்கித் தன்னையும் ஆயர்கள் வழிபடும்படி அருள் செய்ய வேண்டினன். அதற்கேற்ப இந்திரனை மக்கள் போகிப் பண்டிகையன்று வழிபடத் துவங்கினர். சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியன இந்திரனுக்கு விழா எடுத்தச் செய்தியைக் கூறுகின்றன.

இப்பண்டிகை தமிழகம் மட்டுமன்றிப் பிற மாநிலங்களிலும் வேறு வேறு பெயர்களில் கொண்டாடப்படுகிறது. சான்றாக, பஞ்சாப் மாநிலத்தில் 'லோரி' (Lohri) என்ற பெயரிலும்,ஆந்திரமாநிலத்தில் 'கொப்பிப் பண்டிகை' (Goppi Festival) என்ற பெயரிலும் கொண்டாடப்படுகின்றது. மார்கழி மாதம் முதல் நாளிலிருந்து இறுதி நாள்வரை நாள்தோறும் வாசலில் கோலமிட்டு மூன்று உருண்டை சாணம் வைத்து

அவற்றின்மீது பூசணிப் பூவை வைப்பர். இம்மூன்று சாணி உருண்டைகள் ஆக்களையும், அவற்றைக் காத்த கண்ணனையும், துணைக் காரணமாக அமைந்த கோவர்த்தன மலையையும் குறிக்கும். இந்நாளில் மாலை வேளையில் விளக்கு வைத்துப் பூக்கள் தூவி கொப்பி அடித்து (மும்மி அடித்துப்) பாட்டுப் பாடுவர். இதனால் இவ் விழாவினைக் கொப்பிப் பண்டிகை என அழைப்பர்.

**பொங்கல் திருநாள் :**

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது பழமொழி. தை மாதத்தின் முதல் நாள் பொங்கலாகும். தமிழர் இதனைப் 'பொங்கல் திருநாள்' என அழைப்பர். 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தெலுங்குக் கவி 'ஸ்ரீநாதுடு' இதைப் 'பெனுபண்டுவு' (Penu Pandaru) என அழைக்கின்றார். இதனை 'மகர சங்கரராந்தி' எனவும் அழைப்பர். 'சங்கராந்தி' எனும் சொல்லுக்குச் 'சேருதல்' என்று பொருள். சூரியன் பன்னிரு ராசிகளுடன் ஒவ்வொரு மாதமும் சேருவான். பன்னிரு ராசிகளுள் மேஷம், கடகம், துலா, மகரம் ஆகிய நான்கே முக்கியமானவை. அவற்றுள் சூரியன் மகரராசியுடன் சேரும் முதல் நாளே நாம் பொங்கல் எனக் கொண்டாடப் படும் மகர சங்கராந்தியாகும்.

வருடத்தில் முதல் ஆறு மாத காலத்தை (ஜனவரி 15 முதல் ஜுலை 15 வரை) உத்தராயணம் எனவும் பிற்பகுதி ஆறுமாத காலத்தை (ஜுலை 15 முதல் ஜனவரி 15 வரை) தட்சிணாயணம் எனவும் அழைப்பர். இவ் விரண்டில் உத்தராயணப் பகுதிக் காலமே சிறந்தது என்பர். ஏன் இறப்புக் கூட தட்சிணாயணக் காலத்தில் நிகழ ஆன்றோர் விரும்ப மாட்டார்கள். தட்சிணாயணக் காலத்தில் சூரியன் வடக்கிலிருந்து தெற்கு நோக்கியும் உத்தராயணக் காலத்தில் தெற்கிலிருந்து வடக்கு நோக்கியும் பயணம் செய்வான். உத்தராயண காலம் செல்வச் செழிப்பில் மேன்மையுற்று விளங்கும். மகாபாரதப் போரிலே பீஷ்மர் அர்ச்சுனன் அம்பால் வீழ்த்தப்பட்டார். போர்க்களத்தில் அம்புகளால் படுக்கை செய்து அவரைப் படுக்க வைத்தனர். தட்சிணாயண காலத்தில் அவர் உடலில் அம்பு புகுந்திருந்தாலும் உத்தராயணம் வரும் வரை காத்திருந்து உயிர் நீத்தார் எனப் பாரதம் கூறுவதிலிருந்து உத்தராயணத்தின் சிறப்புப் புலப்படும். பொங்கல் திருநாள் உத்தராயணத்தின் முதல் நாளிலேயே கொண்டாடப்படுகின்றது.

'பொங்கல்' எனும் சொல் 'பொங்கு' எனும் அடிச்சொல்லிலிருந்து தோன்றியதாக அறிஞர் மு. அருணாசலம் கருதுகிறார். இச்சொல்லிற்குச் சமை, பொங்க வை முதலிய பொருள்கள் உண்டு. அறுவடை செய்து கொணர்ந்த நெல்லைக் குற்றிப் புத்தரிசியாக்கிப் புதுப்பானையில் இட்டு பால் ஊற்றி அடுப்பில் ஏற்றுவார். பானையிலிருந்து பாற்சோறு கொதித்துப் பொங்கி வழியும். அப்போது பெண்களும் குழந்தைகளும் 'பொங்கலோ பொங்கல்', 'பொங்கலோ பொங்கல்' எனக் கூவி மகிழ்ச்சியில் திளைப்பர். இவ்வாறு பானை பொங்கி வழிதல் ஆண்டு முழுதும் நல்ல விளைச்சலுக்கு அறிகுறி என உழவர் கருதுவர்.

பின்னர்ப் பொங்கல் பானையை அடுப்பிலிருந்து இறக்கி, அதற்கு மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு இஞ்சிச் செடிகளையும் கரும்பையும் இருபுறம் வைத்துச் சூரியனைத் திறந்த வெளியில் வழிபடுவர். இவ்வழிபாடு காலை 11 மணி முதல் நண்பகல் 1 வரையில் நிகழும். ஏனெனில் அப்போது சூரியன் உச்சி வானில் உலா வந்து கொண்டு இருப்பான். அப்போது உணவுப் பொருட்களின்மீது அவன் கிரணக் கைகள் முழுதும் படும். இதனால் சூரியன் அவ்வழிபாட்டை ஏற்றுக்கொண்டதாகப் பொருள் என்று மக்கள் கருதினர் எனலாம்.

சூரியனை வாழ்த்தி வணங்கும்முறை சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ளது. இங்குப் பொங்கல் எனும் பெயரில் விழாவின்றி, இவ்வுலக உயிரினங்களுக்குச் சூரியன் உதவுவதாகக் கருதி வாழ்த்துப் பாடல் அமைந்துள்ளது.

"ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்"

(சிலப். மங்கல. அடி. 4-6)

என்கிறார் இளங்கோவடிகள் இவ்வாறு துவக்கக் காலத்தில் ஞாயிற்றைப் போற்றிய மரபு பிற்காலத்தில் பொங்கல் திருநாள் கொண்டாடும் அளவில் வளர்ச்சியுற்று இருக்கலாம் என்று எண்ண இடமுண்டு.

**மாட்டுப் பொங்கல் :**

உழவர் தோளுக்குத் தோள் கொடுத்து உதவுவன மாடுகளாகும். இவற்றிற்கு நன்றி செலுத்தும் வகையில் மாட்டுப் பொங்கல் கொண்டாடப்படுகின்றது. இதைக் 'கோ பூஜை' எனவும் கூறுவர். இவ்விழா பொங்கலுக்கு அடுத்த நாளில் கொண்டாடப்படுவதாகும்.

தனக்கிருந்த ஒரே மகனையும், கன்றிழந்த பசுவின் துயரத்தைக் கண்டு பொறுக்கலாற்றாது தேர்க்காலில் கட்டி இடறிக் கொன்று பசுவின் துயரத்தைத் தீர்த்தான் மனுநீதிச் சோழன் எனப் புராணக் கதை கூறுகிறது. இக்கதையிலிருந்து பண்டைக் காலத்தில் மன்னர்கள் பசுவிற்குக் கொடுத்த மதிப்புப் புலனாகும்.

மேலும், தமிழ் இலக்கியங்களில் வரும் மாடு எனும் சொல்லிற்குச் செல்வம் என்பது பொருள். மாடுகள் இல்லத்தில் மிகுந்திருந்தால் மிகுந்த செல்வம் உண்டாகும் என நம்பினர். மாட்டிற்கு விழா எடுப்பது செல்வத்திற்கு விழா எடுத்தலுக்குச் சமமாகும். எனவே மாட்டுப் பொங்கல் கொண்டாடுவதாகக் கருதுகின்றனர்.

மாட்டுப் பொங்கலன்று மாடுகளை வேலை வாங்கமாட்டார்கள். மாட்டுப் பொங்கலன்று வைகறையில் முதல் நாள் பொங்கலன்று அரிசி கழுவிய நீரை எடுத்துச் சென்று கழனிகளில் தெளித்துப் 'பொங்கலோ பொங்கல்' என்று கூவும் ஓசை கழனிகளெங்கும் இனிமையாக ஒலிக்கும்.

மாட்டுப் பொங்கலன்று மாடுகளைக் குளிப்பாட்டி நெற்றியில் மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு அதன் கொம்பு களைச் சீவி வர்ணம் பூசி, மாலைகள் இட்டு, பலூன்கள் கட்டி அழகு செய் வர். கொம்பின் நுனியில் சலங்கை கட்டும் வழக்கமும் உண்டு. பின்னர் மாலை வேளையில் மாட்டிற்குப் பூசை செய்து மேளம் முழங்க வண்டியில் கட்டியோ தனித்தோ ஊரைச் சுற்றி வரச் செய்வர்.

இந்நாளில் அரிசிச் சோற்றையும் ஏழு அல்லது இருபது வகையான காய்கறி உணவுகளைச் சமைத்துக் கையில் ஒரு பிடிசோற்றையும் காய் கறிகளையும் கொண்டு சென்று பசு விற்கு ஊட்டுவர்.

மாட்டுப் பொங்கலன்று 'ஜல்லிக் கட்டு' அல்லது 'மஞ்சி விரட்டு' எனக் கூறப்பெறும் மாடுபிடி சண்டையும், கோழிச் சண்டைகளும், மாடுகளின் தலையில் பணமுடிப்பு கட்டப்பெற்று; அக்காளையை யார் அடக்குகிறார் களோ அவர்களுக்கே அப்பணம் சொந்தம் எனக் கூறும் வீர விளை யாட்டுகளும் நிகழும்.

காணும் பொங்கல் :

பொங்கலின் இறுதி நாள் விழா வாக இது அமையும். இதனைக் 'காணும்பொங்கல்' எனவும், கன்னிப் பெண்கள் பொங்கல் வைப்பதால் 'கன்னிப் பொங்கல்' எனவும் 'கரி நாள்' எனவும் அழைப்பர். கரி நாளில் எவ்விதச் செயலையும் செய் தல் கூடாது என்பது ஆன்றோர் கருத்து. ஆகவே மக்கள் உழைக் காமல் எவ்விதச் செயலையும் செய் யாமல் சில விளையாட்டுகள் விளை யாடிப் பொழுது போக்கி மகிழ்வர். மாலை நேரம் ஆனதும் அவ்வூர்க் கடவுளின் வீதி திருஉலா நடை பெறும்.

நகரங்களில் இதைக் காணும் பொங்கல் என அழைப்பர். இந் நாளில் சிறியவர்கள் தங்கள் உறவின் பெரியாரைக் கண்டு ஆசி பெறுவர். ஊரில் பணி புரிபவர்கள் ஊர்ப் பெரி யவர்களிடம் 'இனும்' பெற்று மகிழ் வர். சிலர் இந்நாளில் நகரங்களில் இருக்கும் கோயில்களுக்குச் சென்றும் பார்க்க வேண்டிய இடங்களை உல் லாசமாகக் கண்டுகளித்தும் மகிழ்ச்சி யில் திளைப்பர். இவ்வாறு காணும் பொங்கலோடு பொங்கல் திருநாள் இனிதே நிறைவு பெறுகிறது.

இப்பொங்கல் விழாவிற்கு அடிப் படையாக அமைவது மகர ராசி யாகும். இது பொன்னிறக் கொம்பு களுடைய ஆடு போன்று தலைப்பகுதி யும் முதலையின் வால் பகுதி போன்று இறுதிப் பகுதியும் உடையதாக வானில் விளங்கும் என்று இந்து புராணங்கள் கூறுகின்றன. கிரேக்கர் கள் முன்பகுதி ஆடு போன்றும் பின் பகுதி மீன் போன்றும் அமைப்புடைய தாக மகரம் விளங்குகிறது என்கின் றனர். மேலும் அவர்கள் மகர ராசி எவ்வாறு தோன்றியது என்பதற்கு இரு கதைகள் கூறி விளக்குகின்றனர். பேக்கான் (Backon) என்னும் தேவதை பிற தேவதைகளுடன் கூடி நைல் (Nile) நதிக்கரையில் விருந்து உண்டு கொண்டு இருந்தது. அப் போது டைபான் (Typhon) எனும் பூதம் அங்குத் தோன்றியது. அதைக் கண்ட பேக்கான் தவிர பிறதேவதை கள் அஞ்சியோடின. பேக்கான் மட்டும் தனித்து நின்றது. 'நீ உன் உருவத்தை மாற்றிக் கொண்டால் உன்னை உயிரோடு விடுவேன்' என்று டைபான் கூறியது. அதற்கேற்ப பேக் கான் தன் உருவத்தை ஆடாக மாற்றிக் கொண்டது. இதுவே மகர ராசியாக வானில் தோன்றுகிறது என்கின்றனர். சிலர், 'பான்' எனும் ஒரு தேவதை நைல் நதிக்கரையில் உலவிக் கொண்டு இருந்தது. திடீ ரென்று மயக்கமுற்று நைல் நதியில் விழுந்துவிட்டது; முழுகி எழுந்ததும் ஆடாக மாறிவிட்டது. இதனை ஜலதேவதை என்பர். இதுவே வானில் மகர ராசியாகத் தோன்று கிறது என்கின்றனர்.

எகிப்து தத்துவ ஞானிகள் 'நம்' என்பதை ஜல தேவதையாகக் கருதி னர். ஏனெனில் மகர ராசிக்கும் 'நம்' தெய்வத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகக் கருதுகின் றனர். மகர ராசியுடன் சூரியன் சேரும் காலத்தில் அனைத்தும் செல்வச் செழிப்புடன் விளங்குகிறது. அக் காலத்தில்தான் எகிப்திலும் நைல்நதி பொங்கி வழிவதும் இன்ன பிற வளங் களும் ஏற்படுகின்றன. எனவே அவர் கள் மகர ராசியுடன் 'நம்' தெய் வத்தை ஒப்பிட்டுப் பேசுகின்றனர்.

எனவே, பொங்கல் திருநாள் பற் றிய கருத்துகள் ஒரு மாநிலம், ஒரு நாடு என்ற அளவில் இல்லாது உல களவில் பரந்து விளங்குவதைக் காண லாம்.

*



# கோதை வரைந்த கோலங்கள்



ஆயர் குலத் தோன்றலிடம் ஆராக் காதல் கொண்டாள் கோதை. அவன் ஆழிமழைக் கண்ணனாகவும், வேரிமயிர்ப் பொங்கும் சிங்கமாகவும் அவளுக்குக் காட்சி தருகிறான். அவளது அகக் காட்சிகள் அழகான கவிதைக் கோலங்களாகின்றன.

இறைவனின் பெருங்கருணை அறக் கருணை, மறக்கருணை என இருவகைப் படும். அறக் கருணையை ஆழி மழை யாகவும், மறக்கருணையை அரிமா வான சிங்கமாகவும் ஆண்டாள் உண ருகின்றாள்.

கடவுளின் பேரருளைக் கார்மழை யாகச் சொல்வது ஆன்றோர் மரபு. மாணிக்கவாசக சுவாமிகளும் தம் திருவெம்பாவையில் "எம்பெருமாட்டியை விட்டுப் பிரியாத எம்பெருமான் அன்பர்க்கு அருள முற்படுவது போல மழையே நீ பொழியாய்!" என்கிறார்கள்.

மழை என்றால் மேகம் கருத்தல், மின்னல், இடி, பெருநீர்ப் பொழிவு என்ற தன்மைகள் இருக்கும். இங்கு மணிவாசகர் மனக்கண்களில் முன்னிக் கடலைச் சுருக்கி எழும் மேகம் உடையாள் எனத் திகழ்கிறது. அது மின்னிப் பொலிவது ஆளுடையாள் சிற்றிடையை நிகர்க்கின்றது. உமா தேவியின் திருவடிகளில் அணியப் பெற்ற பொற்சிலம்பைப் போல இடிக்கிறது. அவளது திருப்புருவம்

திரு. சி. முருகானந்தம்,
சென்னை.

எனும்படி வானவில் குலவுகிறது. முன்னியவள் நமக்கும் முன்கரக்கும் இன்னருளே எனப் பொழிகிறது.

அங்ஙனமே ஆண்டாளின் கற்பனை யும் சிறகடிக்கிறது. உணர்ச்சிப் பெருக்கில் உன்னதச் சொற்கோலங் கள் உயிர்த்துடிப்புடன் வெளிப்படு கின்றன. அவைதாமே உண்மையான கவிதைகள்?

காம்போதி ராகத்தில் கண்ணனைப் பாடுகின்றாள். ஆதி தாளத்தில் "ஆழி மழைக் கண்ணா" என்று ஆரம்பித்து "ஒன்றும் நீ மறைக்காதே" என்று உரிமையுடன் கெஞ்சுகிறாள். "ஆழி யுள் புகுந்து அந்நீரை முகந்துகொள்" என்று அன்புக் கட்டளை இடுகின் றாள். அடுத்தடுத்து ஆர்த்து வரும்

மழைபோல் வார்த்தைகள் தம்முள் வீறுகொண்டு பொருட் செறிவுடன் புறப்படுகின்றன.

ஆழிநீர் முகந்து கொண்டு...அப் புறம்?

"ஆர்த்து ஏறு!". அதாவது பேரொலியுடன் மேலே எழு, இங்கே கவிதைச் சுவை கன்னல் சுவை யென வரிக்கு வரி ஏறுகின்றது. மழை என்ருல் மேகத்திற்குக் கருமை வேண்டும். அந்தக் கருமையும் எப் படிப்பட்டதாக இருக்கவேண்டும்?

ஊழி முதல்வன் உருவம் போல் இருக்கவேண்டுமாம். அதாவது ஊழிக் காலத்திலும் கேடில்லாத ஆதிப்பெரு மாளான வராக மூர்த்தியின் திரு மேனி போல் உருவத்தே கருமை கொள் என்கின்ருள். அவள் கண் ணன் எனும் கரும் தெய்வத்தின் காட்சி பழகிக் கிடப்பவள் அல்லவா? கார்மேகத்தில் கண்ணனைக் கண்டு நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத் துகிருள்.

அங்ஙனமே மேகம் கருக்கிறது. மேகம் கருத்தால் மின்னல் பிறக்கு மன்ருே? அம்மின்னலைப் பத்மநாபன் கையில் விளங்கும் சக்கரத்தில் காண் கிருள். தீயிற் பொலிகின்ற செஞ் சுடர் ஆழியே அவள் சிந்தையில் மின்னி இச்செய்யுளில் ஒளிர்கின்றது.

மின்னலை அடுத்து வருவது பேரிடி அல்லவா? அது வலம்புரிச்சங்குபோல் அதிருகிறது. உலகம் அதிரும்படி முழங்கும் பால் போன்ற வெண்மை யான பாஞ்சசன்னியம் என்ற சங்கம் பத்மநாபனின் மற்ருெரு கையில் விளங்குவது. ஆகவேதான் "பாழியம் தோளுடை பத்மநாபன் கையில் ஆழி போல் மின்னி வலம்புரி போல் நின்ற திர்ந்து" என்று கவிதைச் சுடர் விடு கிறது.

மின்னலும் இடியும் பொலிந்த பின்னர் வானம் சும்மா விருக்குமா? மழை மண்டிக் கரக்கு மன்ருே! அது எப்படி இருக்கிறதாம்?

"சார்ங்கம் உதைத்த சரமழை போல்" என்கிருள். பெருமானுடைய சார்ங்கம் என்னும் வில்லிலிருந்து எய்யும் அம்பு மழை போல் பொழி கிறதாம். என்னே அவள் கவித்வம்!

ஆழி மழைக்கண்ணு! ஒன்று நீ
கைகரவேல்
ஆழியுள்புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழிமுதல்வ னுருவம்போல்
மெய்கறுத்து,
பாழியந் தோளுடைப் பற்பநாபன்கையில்
ஆழிபோல் மின்னி, வலம்புரிபோல்
நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழை
போல்
வாழ உலகினில் பெய்திடாய்,
நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ
ரெம்பவாய்.

"கடல் போன்ற பெருமையுள்ள மழையாகிய அருளாளனே! நீ ஒன் றையும் மறைத்து வைக்காதே! கட லுக்குள் செல்! கடல் நீரை முகந்து கொள்; பேரொலியுடன் மேலே எழு! ஊழிக்காலத்திலும் கேடில்லாத திரு மாலின் திருமேனிபோல் உருவத்தே கருமைகொள்! பெருமையும் எழி லும் பொருந்திய பத்மநாபனின் திருக்கரத்தினில் விளங்கும் திருச் சக்கரத்தினைப் போல் மின்னிட்டு விளங்கு! அவனது மற்ருேர் திருகரத் தில் விளங்கும் வலம்புரி சங்கு போல ஆர்த்து முழங்கு! பெருமாளின் சார்ங்கம் என்னும் வில்லிலிருந்து விடுபடும் அம்பு மழை போல் உலகம் வாழவும், நாங்கள் மகிழ்ந்து மார்கழி நீராடவும்காலந்தாழ்த்தாமல்பொழி வாயாக!"

இவ்வண்ணம், மாயவனின் கருணை மழையில் மங்கையவள் நனைகிருள்; நாம் அவளது கவிதை மழையில் ஈர மாகிருேம்.

தண்ணெனும் மழையே பொழிந்து கொண்டிருப்பின் சராசரம் தாங் காது. வெப்பமும் மிக்க வேண்டும். அதுவும் அவன் கருணையே!

அதனை அரிமுகன் அச்சுதனைக்கண்டு அடாணு ராகத்தில் "பூவைப் பூ வண்ணு" என்று கொஞ்சுகிருள்.

'மாரிமலை முழைஞ்சில்' என்றுகவிதை வரியைத் தொடங்கும் போதேபாடல் களைகட்டி விடுகிறது. சொல்லுக்குச் சொல் நாவில் அண்ணித்து அமு தூறுகிறது. மழைக்காலத்தில் மலைக் குகைக்குள்ளே ஒரு சிங்கம் உறங்கு கிறது.

எத்தகைய சிங்கம்?

'சீரிய சிங்கம்' என்கிருள். 'சீரிய' என்ற மூன்றெழுத்தில் பல வீறு மிகுந்த விமரிசை உண்டு. அது செற் ருர் திறலழித்துச் சேர்ந்தார்க்குப் பறைதரும் சிங்கம்; இரணியாசுரனை வதம் செய்து பக்தன் பிரகலாதனைக் காத்திட இறைவன் எடுத்த நரசிம் மாவதாரம்.

அவன் கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சியவன். மாவாய் பிளந்த வன்; மல்லரை மாட்டிய தேவாதி தேவன். புள்ளின் வாய் பிளந்தவன்; பொல்லா அரக்கன் இராவணன் தலைகள் பத்தினையும் கிள்ளிக் களைந் தவன், குவலயாபீடம் என்னும் கொடிய யானையைக் கொன்றவன். செப்பமுடையான்; திறலுடையான்; செற்ருர்க்கு வெப்பம் கொடுக்கும் விமலன். இத்தனைச் செய்திகளையும் 'சீரிய' என்ற வீரிய சொற்கொண்டு விளக்குகின்ருள்.

மாற்ருரை மாற்றழிக்கவல்ல சிங் கம் மன்னிக்கிடந்து உறங்குகிறதாம். கூடாரை வென்ற கொடும் போர் களுக்குப் பின்னர் அது சோர்ந்து கிடந்து ஓய்வெடுக்கிறதோ? சோர்வு என்பது பரந்தாமனுக்கு ஏது? சிரு ஷ்டி, சஸ்திதி ஸம்ஹாரம் என்ற ஓயாத தொழிலை ஒழிவறச் செய்து வரும் அவனுக்கு ஓய்வுதான் ஏது?

அது அரிதுயில் அல்லது யோக நித் திரை எனப்படும். ஆகவே 'கிடந்து றங்கும்' என்ற வார்த்தையில் பாற் கடலுள் பையத் துயின்ற பரமனை-

வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை நாம் தரிசிக்க முடிகிறது.

அடுத்து மன்னிக் கிடந்து உறங்கும் சீரிய சிங்கம் 'அறிவுற்றுத் தீ விழித்து' என்கிருள். கிண்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போன்ற செங்கண், திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல் விழித்துநோக்கினல் எங்ஙனம் இருக்கும்? செஞ்சுடர்த் தீப்பிழம்பு திக்கெலாம் ஜொலிக்காதோ? தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழிபோல் மின்னி ஒளிராதோ? அதனுல்தான் 'தீ விழித்து' என்ற அழகிய வார்த்தையில் குறித்தனள். அதில் சற்றுச் சீற்றமும் தெரிகிறது.

சிங்கத்தின் சீற்றம் போலவே இனி வார்த்தைக்கு வார்த்தை வீறு கொண்டு எழுகிறது. உறக்கம் தெளிந்து எழுந்து, அனல் கக்க விழித்த சிங்கம் "வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி" என்கிருள். பிடரிமயிர் சிலிர்க்கும்படி நாற்புறமும் திரும்பித் திரும்பி உதறுகிறதாம்.

"மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு" எனும் போது வீறுகொண்டு பொங்கி எழும் சிங்கத்தின் விசுவரூப தரிசனத்தில் நாம் மெய்சிலிர்க்கிருேம். சோம்பல் முறித்து நிமிர்ந்து முழங்கிக் குகையிலிருந்து வெளியே புறப்படும்போதுசிங்கம் மட்டுமன்றிச் சிங்காரக் கவிதைப் பண்பும் அல்லவா போதருகிறது!

நரசிம்மாவதாரத்தின் பீடார்ந்த கோலத்துடன் புறப்பட்டு வந்தவனைச் சிறந்ததொரு சிங்காசனத்தில் அமர்ந்தருள வேண்டுகிருள். அது மாற்ருர் வலிதொலைந்து ஆற்ருது வந்து அடிபணியும் சிம்மாசனம். அதன்கீழ் அங்கண்மா ஞாலத்து அரசர் அபிமான பங்கமாய் வந்து சங்கமிருப்பார்கள். அதனுல் அதைச் 'சீரிய சிங்காசனம்' என்று திருவாய் மலர்ந்தனள்.

அவ்வழகிய அரியாசனத்தில் அமர்ந்து அவர்கள் வந்த காரியத்தை ஆராய்ந்தருளக் கோருகிருள். அவர்கள் வந்த காரியம் யாதோ?

பலவாருக அவனது வீரத்தைப் புகழ்ந்துப்போற்றி பறைகொள்வதற்காக வந்திருக்கிருர்களாம். பறை தருதல் என்பது அவர்கள் விரும்பியவற்றை வழங்குதலாகும். அவர்கள் வேண்டுவன யாவை?

ஞாலமெல்லாம் நடுங்க முரலும் பாலன்ன வண்ணத்துப் பாஞ்ச சன்னியம் போன்ற சங்குகள் வேண்டும். நெடுந்தூரம் ஒலிக்கின்ற மிகப்பெரிய பறைகள் வேண்டும். பல்லாண்டு இசைப்பவர்கள் வேண்டும். கோல விளக்குகள் வேண்டும்; கொடி வேண்டும். விமானம் (மேற்கட்டி) வேண்டும். இவையெல்லாம் மார்கழி நீராடும் பொருட்டு முன்னேர்கள் செய்வனவும் வேண்டுவனவுமாகும் என்கிருள்.

அவனைப் பாடிப் பறைகொண்டு அவர்கள் பெறும்படியான பரிசுகள் யாவை?

சூடகம், தோள்வளை, தோடு, செவிப் பூ, சிலம்பு என்பவையாகிய பல அணிகலன்களும், ஆடைகளும் அதன் பின்னே பால்சோறு மூடும்படி நெய்பெய்து முழங்கை வழியாக நெய் ஒழுகக் கூடியிருந்து உண்டு உள்ளம் குளிர்தலும் ஆகிய லௌகிகங்கள் உரைக்கப்பட்டாலும் அதனையும் தாண்டிய பொருளொன்று உண்டு.

அது, செல்வத் திருமாலின் செம்பொற்கழலடியாகும். அதாவது, ஆயர் சிறுமியராகிய ஜீவாத்துமாக்களுக்கு வேண்டுவது பரமாத்துமாவின் திருவடிப் பேறுதானே? வெறும் ஆடை அணிகலன்களும், அறுசுவை உணவுமே பறைதருதலாகா. அவை பரமபதம் அல்லது வைகுந்தத்தின் ரூபகங்களே. கேவலம் லோகாயத காரியங்களுக்காகவா ஆண்டாள் அவனிடம் ஆராத காதல் கொண்டிருப்பாள்? ஐம்புல நுகர்வின் பொருட்டோ அலர்மாலைகளைத் தான் சூடி அழகு பார்த்துப் பின் தன் பிரிய மானவனுக்கு அணிவித்து அகமகிழ்ந்தாள்? மண்ணுலக இன்பங்களைக் குறிகொண்டோ தன் மனத்துக்கினியானைப் பண்ணெழுகும் பாடல்களால் போற்றித் துதித்தாள்?

அன்றன்று, அவனது பொற்றாமரையடியைப் போற்றும் காரணத்தை இருபத்தொன்பதாவது பாடலில் அவளே உரைக்கின்ருள். "இன்று பறைகொள்வதற்காக அன்றுகாண் கோவிந்தா! என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னேடு உற்ரோமே யாவோம்; உனக்கே நாம் ஆட் செய்வோம்" என்று அவனது திருவடிச் சேவையினையும் ஒழிக்க ஒழியாத அவனது உறவையும் குறிப்பிடுகின்றனள்.

ஆகவே, பறை தருதல் என்பதற்கு விரும்பியவற்றை வழங்குதல் என்ற சாதாரணப் பொருள் கொள்ளாமல் விரிந்த பொருள் கொள்ள விழைகிருேம்.

அவ்வாறே இவள் பறைகொண்ட வரலாறும் வருகிறது. இங்கு நாம் எடுத்துக்கொண்ட 'மாரிமலைமுழைஞ்சில்' என்கிற இருபத்து மூன்ருவது பாடலின்ஈற்றில் "யாம்வந்தகாரியம் ஆராய்ந்தருளாய்" என்ருள். இருபத்து நான்காவது பாடலில் "என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான் வந்தோம்" என்றனள். அடுத்தப் பாடலிலும் "உன்னை அருத்தித்து வந்தோம்" என்ருள்.

இருபத்தாருவது பாடலில் வேண்டுவனவாகச் சங்கம், பறை முதலானவற்றையும், அடுத்தப் பாடலில் பாடிப் பறைகொண்டு அவர்கள் பெறும் பரிசுகளாகச் சூடகம், தோள்வளை என்றனைய பல்கலனும், பாற்சோறும் கூடியிருந்து உண்டு உள்ளம் குளிர்தலும் ஆகியவற்றைக் குறிப்பிட்டனள். ஆனுல் அவை உபசாரமாகச் சொல்லப்பட்டவையேயன்றி உண்மையான பறை தருதலாகா.

(28-ம் பக்கம் பார்க்க)



# ஸ்ரீ சபரிமலை ஐயப்பன்

திரு. வி. எஸ். ஸ்ரீனிவாசன்,
தஞ்சாவூர்

பகவான் ஸ்ரீ ஐயப்ப சுவாமி ஸர்வ தேவதா சொரூபமானவர். உலகம் உய்யும் பொருட்டு, மக்கள் நலமுற்று வாழ, யோகாஸன மூர்த்தியாய் சின் முத்திரையோடு சபரிமலை க்ஷேத்திரத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்கும் கலியுக வரதன் அவர்; ஹரிஹர புத்திரர்.

ஐயப்பனை ஆராதிப்பவர்களுக்கு "துவைதம்,, அத்வைதம், விசிஷ்டாத்வைதம்" அனைத்தும் ஒருங்கே "ஐயப்பாத்வை"மாகி விடுகிறது. ஏழை—பணக்காரன் என்ற ஏற்றத் தாழ்வு இன்றி எல்லோரும் சமமான நிலையில் அவரைச் சேவித்துப் பலன் பெறுகிறார்கள்.

ஐயப்ப பக்தர்கள்—சரணம் விளிக்கும்போது ஐந்து ஸ்தலங்களைக் குறிப்பிடுகிறார்கள். காந்தமலையில் ஜோதியாகவும், சபரிமலையில் கௌமாரக் கோலத்தில் ஐயப்பனாகவும், குளத்துப்புழையில் பாலகனாகவும், ஆரியங்காவில் தாம்பத்தியக் கோலத்தில் பூர்ண புஷ்களா சமேதனாகவும், அச்சன் கோயிலில் வானப்ரஸ்த கோலத்தில் அரசனாகவும் ஐயப்பபெருமான் வீற்றிருப்பதாக ஐதீகம்.

"சபரிமலை ஐயப்பா சரணம், காந்தமலை ஜோதியே சரணம், குளத்துப்புழை பாலகனே சரணம், ஆரியங்காவு அய்யனேசரணம் அச்சன்கோவில் அரசனே சரணம்" என்று பக்தர்கள் தரிசிக்கும் இந்த ஐந்து கோவில்களிலும் பரசுராமரே சாஸ்தாவைப் பிரதிஷ்டை செய்ததாக வரலாறு கூறும்.

### சாஸ்தா ஆராதனையின் தத்துவம்

ஐயப்ப சாஸ்தாவின் ஆராதனையில் பெரிய தத்துவம் அடங்கியுள்ளது. யோகிகள் சாஸ்தாவை வழி வணங்கி வந்துள்ளனர். யோகசாஸ்திர ரீதியில் அவர்கள் தர்மசாஸ்தாவின் பிரதிஷ்டைகளுக்கு விளக்கம் சொல்லியுள்ளனர். அதன் விவரம் வருமாறு:

நமது தேகத்தில் ஆறு ஸ்தானங்கள் உண்டு. நாபிக்குக் கீழே—கால்களுக்கு மேலே "மூலாதாரம்" என்ற பீடம் இருக்கிறது. பிருதிவி மயமான அதில் மஹாகணபதி விளங்குவார். அதற்கு மேலே "சுவாதிஷ்டானம்" எனும் ஸ்தானம் உள்ளது. ஜல மயமான அதில் ஸ்ரீமந்நாராயணன் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. நாபி கமலத்திற்கு "மணிபூரகம்" என்று பெயர்.

அக்னிமயமான அப்பீடத்தில் இருப்பவன் சூர்யன். வாயுமயமான "ஹ்ருதய ஸ்தானம்" "அநாஹதம்" எனப்படுகிறது. அங்கு "பகவதி" தோன்றுவாள். ஆகாசமயமான கண்டத்திற்கு "விஸுத்தி" என்று

பெயர். அங்கே நீலகண்டன் இருப்பார். ஆறுவது இடம், பஞ்ச பூதங்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட "ஆக்ஞா" என்ற ஸ்தானம். நெற்றியில் புருவங்களின் மத்தியில் உள்ள அப்பீடத்தில் யோகீஸ்வரனாய் ஸ்ரீ ஐயப்பன் நம்மை ஆட்கொண்டுள்ளார்.

இந்த யோகசாஸ்திர அடிப்படையில்தான் நெல்லை மாவட்டம் பாபநாசம் அருகிலுள்ள சொரி முத்தய்யனார் கோவில் (மூலாதாரம்), அச்சன் கோவில் (சுவாதிஷ்டானம்), ஆரியங்காவு (மணிபூரகம்), குளத்துபுழா (அநாஹதம்), பந்தளம் (விசுத்தி), சபரிகிரி (ஆக்ஞா) ஆகிய ஆறு இடங்களில் சாஸ்தா பிரதிஷ்டை செய்யப்பட்டதாகச்சொல்லப்பட்டிருக்கிறது. இந்த க்ஷேத்திரங்களை சேவித்தல் விசேஷமாகக் கருதப்படுகிறது.



சபரிமலைக்கோயில் அடிவாரம்.
புகைப்படம்: எம். ராஜலக்ஷ்மி.

### சபரிமலை ஐயப்பன்

கேரளத்தில் மேற்கூறிய தலங்கள் தவிர திருவெள்ளக்காவு, சாமரவட்டம், அரட்டுப்புழா, நெட்டிச்சேரி ஆகிய இடங்களிலும் ஸ்ரீ ஐயப்பனுக்கான ஆலயங்கள் உள்ளன. இதைத் தவிர, கேரளாவின் பெரும்பான்மையான சிவன், விஷ்ணு ஆலயங்களிலும், ஆலயத்தின் தென் மேற்கு மூலையில் சாஸ்தா ஆட்கொண்டிருக்கிறார்.

சாஸ்தா என்றதும் நம் கண்முன் காட்சி தந்து, கனிவுறச் செய்து சபரிமலை ஐயப்பன்தான்! யோகாசனத் தத்துவ நிலையிலுள்ள ஐயப்பன் மலையில் உள்ள பதினெட்டுப் படிகள் பதினெட்டுத் தத்துவங்களைத் தாங்கியுள்ளதாகக் கூறப்படுகின்றது.

சபரிமலை ஐயப்பன் அமர்ந்துள்ள தவக்கோலமே ஒருவகை யோகாசனமாகும். இரு குதிகால்களின்மேல் உடலின் அடிப்பாகத்தை அழுத்தி பிரணவ சொரூபனாக அவர் அமர்ந்துள்ள ஓங்கார ரூபத்தை கண்கண்ட தெய்வத்தை, அருள் வழங்கும் திருக்கோலத்தைப் பார்த்தோர் பேரின்பமுறுவதில் வியப்பில்லை. வலக்கரம் "சின்" முத்திரையிலுள்ளது. மேல் நோக்கிய மூன்று விரல்களோடு சுட்டு விரலும், கட்டை விரலும் இணையும் நிலை.



பம்பாநதி.
புகைப்படம்: எம். ராஜலக்ஷ்மி.

இடக்கரம் பாத கமலங்களைச் சுட்டிக் காட்டும் நிலை. இடுப்பையும், முழங்காலையும் சுற்றி யோக பட்டம். காதில் குண்டலங்கள், சிரத்திலே மகுடம். கழுத்திலே மணிஹாரங்கள், கங்கணகேயூரங்கள் ஆகிய அணிகளோடு முகத்திலே கருணையும், புன்னகையும் தேங்கிட தன்னைச் சரணடைந்தோரை எல்லாம் சம்ரட்சிக்கும் இந்த சபரிகிரி வாசனைக் கண்டு தரிசிக்க எத்தனை



பதினெட்டாம்படி.

புகைப்படம்: எம். ரராஜலக்ஷ்மி.

தூய்மை, கட்டுப்பாட்டுடன் நாட்டின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் மக்கள் சாதிவேறுபாடின்றித்திரண்டு வந்து போகிறார்கள்.

சபரி மலைக்குச் செல்ல மக்கள் எருமேலி, வண்டிப்பெரியார், சாளக்கியம் ஆகிய மூன்று பாதைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இவற்றில் எருமேலி வழி புராண முக்கியத்துவம் பெற்றது. ஹரிஹர புத்திரனவர் மஹிஷியை வதம் செய்து உடலைக் காலால் உதைத்து எழுந்தபோது, அது எங்கெங்கோ சுற்றிவிட்டு இறுதியில் இந்த இடத்தில் வந்து விழுந்ததாகச் சொல்லப் படுகிறது. பிறகு அதை அழுத்திப் புதைக்க ஸ்வாமி மணிகண்டனுக அவதரித்து இந்த உடலின் மீது ஏறி நின்று நர்த்தனமாடினதாக வரலாறு. எருமேலியிலும் சாஸ்தா கோவில் உள்ளது.

ஸ்வாமியே சரணம்

ஸ்வாமியே சரணம் என்பதற்கான ஸ்லோகமும், அதன் பொருள் சுருக்கமும் வருமாறு :

''ரிஷிப்ரோக்தந்து பூர்வாணும்
மகாத்மாநாம் கிம்மதம்
''ஸ்வாமி சரணம்'' இத்யேவம்
முத்ரா வாக்யம் ப்ரகீர்த்திதம்,
''ஸ்வா'' காரோச்சார மாத்ரேண
ஸ்வாகாரம் தீப்யதேமுகே
''ம''காரம் து சிவம் புரோக்தம்
''இ''காரம் சக்தி ருச்யதே
ஸ்வாத்மானஞ் ச பராத்மானம்
த யோரைக்யம் யதார்த்தகம்
ப்ரஸன்னம் பாப ஸம்ஹாரம்
விநீதம் வஸ்ய காரணம்
''ஸம்'' பீஜம் சத்ரு ஸம்ஹாரம்
''ரே''பம் ஞானக்னி வாசகம்
''ண''காரம் ஸித்திதம் சாந்தம்
முத்ரா விநய ஸாதனம்
சாஸ்த்ரு முத்ரா வாக்ய மேவம்
யந் முகே வஸதே லக்ஷ்மி:
வித்யா விநய சாலினி.
கலௌ கலுஷ சித்தானும்
நராணும் பரிசுத்தயே
ரிஷீணும் புனராத்யானும்
உபதேசம் மகத்தமம்............''

பிராண, அபான, வ்யான, உதான, ஸமான வாயுக்களைக் கட்டுப்படுத்த மிகவும் உசிதமான திவ்ய மந்திரம் ஆகும். ''ஸ்வாமியே சரணம்'' என்பது ''ஸ்வாமியே'' என்ற பதத்திலுல், ஜீவாத்மா, பரமாத்மா ஐக்கியமும், ''சரணம்'' என்ற பதத்தில் ''துர்விகாரஹனன''மும் அதன்மூலம் ஞான விநயாதி வர்த்தனையும் நன்கு தெளிவுபடுத்தப்படுகிறது.

செந்தமிழ் நாட்டில்

ஸ்ரீ ஐயப்பன் வழிபாடு கேரள நாட்டிற்கு மட்டும் சொந்தமானதல்ல. தொன்றுதொட்டு தமிழகத்திலும் சாஸ்தாவை வணங்கி வழிபட்டு வந்திருக்கிறார்கள் என்பது வெளிப்படை.

ஸ்ரீ ஐயப்பனை சாஸ்தா என்றும், சாதனர் எனவும், ஐயனர் எனவும் தமிழகத்தில் வழங்குகிறார்கள். சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த திருநாவுக்கரசர் ஐயப்பனை பிரஸ்தாபித்து,

''பார்த்தனுக்கு அருளும் வைத்தார்
பாம்பரை ஆட வைத்தார்
சாத்தனை மகஞ வைத்தார்
சாமுண்டி சாமவேதம்
கூத்தொடும் பாட வைத்தார்
கோளரா மதியம் நல்ல

தீர்த்தமும் சடையில் வைத்தார்
திருப்பயற்றூரனுரே!''

என்று பாடியிருப்பது தமிழகத்திலும் சாஸ்தா மிகப் புராதன காலத்திலும் போற்றப்பட்டு வந்திருப்பது புலனுகும்.

மற்றும், தமிழ் இலக்கண நூல்கள் பலவற்றிலும் "சாத்தான்" எனும் ஐயனுரைப் பற்றி பல குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. ஆனுல், பிற்காலத்தில், தமிழ்நாட்டில் ஐயனுர் கிராம தேவதையருள் தலையான வராகக் கருதப்பட்டு வருகிருர். கிராமப் புறங்களில் இன்றும் காவல் தெய்வமாகக் கருதப்படுகிருர். அங்கெல்லாம் அநேகமாக அவருக்கு யானையே வாஹனமாக உள்ளது. சிற்சில ஐயனுர் சிற்பங்களில் புலியின் மீது அமர்ந்த கோலத்திலும் காணப்படுகிருர்.

காஞ்சி காமாக்ஷி அம்மன் கோயிலில் பூர்ணு-புஷ்களா சமேதராய் சிறு கற்றளியில் சாஸ்தா தரிசனம் தருகிருர். தவிர, கும்பகோணத்திலும் "யானையடி" எனும் பகுதியில் சாஸ்தாவுக்கான சிறு கோவில் உள்ளது. இன்னும் தமிழ்நாட்டில் கிராமப் பகுதிகளில் ஆயிரக்கணக்கான சாஸ்தா கோயில்கள் உள்ளன.

காஞ்சியை யடுத்த பல்லவ புரத்தில் குளக்கரையொன்றில் பூமியில் சற்றுப் புதைந்திட்ட நிலையில் மணற்கல்லினுல் ஆன சின்னஞ்சிறு சாஸ்தாவின் அழகிய சிறிய சிற்பம் இன்னமும் காணப்படுகிறது. மேலும், தஞ்சை மாவட்டம் நன்னிலத்தில் "திரியம்பகபுரம்" எனும் சிற்றூரில் வேலைப்பாடமைந்த சாஸ்தா கோயில் உண்டு.

மகான் அப்பய்ய தீக்ஷிதர்

சாஸ்தா ஐயப்பனையும், மகான் அப்பய்ய தீக்ஷிதரையும் சம்பந்தப் படுத்திய வரலாறு ஒன்றுண்டு. அது வருமாறு:—

## கண் கொடுத்த கலை

தஞ்சை மாவட்டம் சிக்கல் என்னும் சிற்றூரில் முருகப் பெருமானுக்குச் சிலை வடித்திட சிற்பி ஒருவனை அரசன் அழைத்தான். சிற்பி சிலையைச் சிறப்புடன் செய்து முடிந்தான். அத்தகைய அழகு சிலை வேறு ஒன்றும் சிற்பி செய்திடல் கூடாது என்று எண்ணி அரசன் அவன் கட்டை விரலைக்களைந்திடக் கட்டளையிட்டான். கட்டை விரலை இழந்தும் சிற்பி கலைப்பணியை இழந்துவிடவில்லை. எட்டுக்குடி என்னும் எழில் சூழ்ந்த ஊரை அடைந்தான். முருகனுக்கு அங்குச் சிலை வடித்தான். அச் செய்தியை அரசன் அறிந்தான். சினம் பொங்கியது. அக் கலைஞனின் கண்ணைப் பறித்திட ஒரு கொலைஞனை சதியாய் ஏவினுன். கட்டை விரலையும் கண்ணையும் இழந்த பின்பும் சிற்பி சிந்தை மாறவில்லை. கலைப் பணியைக் கலங்காதுதொடர்ந்தான். உடல் ஊனம் அடைந்தது. ஆனுல் உள்ளம் ஊனம் அடையவில்லை. எண்ணங்களையே துணையாகக் கொண்டு அதாவது தன் கற்பனைக் கண் கொண்டு முருகனுக்குச் சிலை வடிக்கத் தொடங்கினுன். சிலையை உருவாக்கிக்கொண்டிருக்கும்போது சிற்பியின் அருகில் நின்று இருந்த பணிப்பெண் ஒருத்தியின் கையில் உளிபட்டு உதிரம் பீறிட்டது. பீறிட்ட அது, சிற்பியின் கண்ணில் சென்று பாய்ந்தது. அடுத்தக் கணம் சிற்பியின் கண் திறந்தது. ஒளி பிறந்தது. 'என் கண் கொடுத்த வேலவனே' என்று சிற்பி சிந்தை மகிழ்ந்து செந்தமிழால் பாடினுன்.

—ஆர். சுப்பராவ்.

சோழ மன்னன் நரஸிம்ம பூபாலன் என்பான் ஒரு சமயம் க்ஷேத்ராடன சமயத்தில் ஸ்ரீ ஐயப்பனின் சிற்பம் ஒன்றைக் கண்டான். வலது கையின் ஆட்காட்டி விரலைக் கன்னத்தில் வைத்தவாறு காணப்பட்ட அந்த விக்ரஹத்தைப் பார்த்த மன்னன்- அந்த முத்திரைக்கு விளக்கம் கூறுமாறு அருகே இருந்த புகழ்பெற்ற கவி அப்பய்ய தீக்ஷிதரைக் கேட்டான்.

தீக்ஷிதர் சொன்னுர்—"கைலாயத்துக்குப் போனுல் அங்கு உமையன்னையை 'அம்மா' என அழைக்கலாம். தந்தையான சிவபெருமானின் மனைவியும் தாய்தானே! ஆனுல், வைகுந்தம் போனுல் ஸ்ரீ லக்ஷ்மி தேவியை எப்படி அழைப்பது? தனது தாயான விஷ்ணு (மோகினி வடிவில்) வின் மனைவியை எப்படி அழைப்பது?' என்று கவலையுற்ற ஐயப்பன் ஆட்காட்டி விரலைக் கன்னத்தில் வைத்து சிந்தித்த வண்ணம் இருக்கிருர்!', என்று பதில் அளித்தார்.

உடனே சிற்பத்தில் கன்னத்தில் வைத்திருந்த விரல் எடுக்கப்பட்டு விட்டதாம்! அப்பய்ய தீக்ஷிதரை அந்த அளவுக்குத் தெய்வங்களின் உள்ளக் கருத்தைக்கூட அறியும் சக்தி படைத்தவர் என்று சொல்வது வழக்கம்.

இவ்வகையில் தொன்று தொட்டு நமது நாட்டில் சிவபிரானுக்கும் திருமாலுக்கும் பிறந்த ஹரிஹர புத்திரனை மக்கள் பல பெயர்களில் பல க்ஷேத்திரங்களில், தங்களது சம்பிரதாயங்களுக்கேற்ப, வணங்கி வழிபட்டு வந்திருக்கிருர்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

அவதார புருஷரான ஆதிசங்கரர்- 'ஆரூட:ப்ரௌட வேகப்ரவஜி தபோவனம் தம்கதம்பம் தரங்கும்...... என்று தொடங்கும் ஸ்லோகத்தில் சாஸ்தாவை வேண்டியுள்ளது போலவே — "ஒவ்வொருவன் மனதிலும் அவர் புகுந்து—தீய சக்திகளை அழித்து-சத்வ குணங்களைச் செழிக்கச் செய்து நலம் பயக்க" அந்தத் தத்துவ தெய்வமாம் தர்ம சாஸ்தாவைத் தூய்மையுடன் வணங்கிப் பிரார்த்திப்போம்!



(23-ம் பக்கத் தொடர்ச்சி)

அவை அறிவற்ற ஜீவாத்துமாக்களின் காரியங்கள் என்பதை இருபத்தெட்டாவது பாடலிலே சொல்லுகின்றாள்.

"அறிவொன்றும் இல்லாத ஆயர் குலத்துச் சிறுமியர்களாகிய நாங்கள், கறவைகள் பின்சென்று காட்டிலே கூடிக் கலந்து உண்போம். ஆகவே எங்களைச் சீறியருளாதே! ஒழிக்க ஒழியாத உந்தன் உறவினையே எங்களுக்குப் பறையாகத் தந்தருளாய்!" என்று தெளிவாகவும் பணிவாகவும் வேண்டுகின்றாள்.

இருபத்தொன்பதாவது பாடலில் முடிந்த முடிவாக முழு விளக்கம் தருகிறாள். "இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உந்தன் திருவடி சேவையே எந்தன் பிறவிப் பெரும் பயன். உன்னோடு உற்றவளாக உறவு பூண்டு வாழ்வதே எனது இலட்சியம். ஆடை அணிகலன்களும், கூடியிருந்து உண்டலுமாகிய மற்றை நம் காமங்களை மாற்றி அருள் வாயாக!"

"இக வாழ்க்கைக்குத் தேவையான ஆடை ஆணி கலன்களை மட்டும் எமக்குப் பறையாகத் தருதல் வேண்டா. பரவாழ்வுக்கு இன்றியமையாத உனது உறவையும் எமக்குத் தா!" என்ற பொருளில்தான் சிம்மாவதாரம் எடுத்து வரும் செல்மலைச் சிறிது தணிவு படுத்துவாள் வேண்டிச் சீரிய சிங்காசனத்தில் அமர்த்தி யாம் வந்த காரியத்தைக் கேட்டு ஆராய்ந்து அருள்வாயாக!" என்று அன்புக் கோரிக்கை விடுத்தனள்.

அவள் இப்போது என்ன கேட்கிறாள். எப்போதைக்கும் என்ன கேட்கிறாள் என்பது ஆராய்ச்சிக்குரிய தன்றோ? அதனால்தான் யாவும் அறிந்த பரந்தாமனையே அவள் ஆராய்ந்து அருளச் சொல்லுகிறாள். அவ்வாறே இப்பாடலைத் தொடர்ந்து இன்றைக்கு என்ன வேண்டும். என்றென்றைக்கும் என்னவேண்டும் என்பவைகளை முறையாக வகுத்துப் பாடினாள்.

இங்ஙனம், நரசிம்ம மூர்த்தியின் அவதாரக் கோலத்தை நம் ஆண்டாள் எட்டே வரிகளில் தெற்றெனக் காட்டினாள். இது அவளால் மட்டுமே இயலும். கோபியர் பாவனையில் எழுகின்ற கூற்றெனினும் பாடின பாவை பரந்தாமன் பிராட்டியன்றோ! அத்தனையும் அருட் கவிகளாக மிளிர்கின்றன.

" மாரி மலைமுழைஞ்சில் மன்னிக்
கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும்
பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே நீ பூவைப்
பூ வண்ணா! உன்
கோயில் நின்று இங்ஙனமே
போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திலிருந்துயாம்வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோ
ரெம்பாவாய். "

'காயாம் பூ வண்ணனே! மழைக் காலத்தில் மலைக் குகைக்குள்ளே உறைந்து கிடக்கும் வீறுமிகுந்த சிங்கமானது உறக்கம் தெளிந்து எழுந்து, அனல் கக்க விழித்துப் பிடரி மயிர் பொங்கிச் சிலிர்க்கும்படி நாற்புறமும் திரும்பித் திரும்பி உதறிச் சோம்பல் முறித்து நிமிர்ந்து முழங்கிக் குகையிலிருந்து வெளியே புறப்பட்டு வருவதுபோல், நீ உன்கோயிலிலிருந்து இங்கு வந்தருள்வாயாக! அழகு பெற அமைந்து சிறந்து விளங்கும் அரியாசனத்தில் வீற்றிருந்து நாங்கள் வந்த காரியத்தைக் கேட்டு ஆராய்ந்து அருள்புரிவாயாக!"

இவ்வாறு, அறக்கருணை கனிந்த அன்புருவை ஆழிமழைக் கண்ணனுகக் கண்டு மகிழ்ந்தவள், மறக்கருணை மிக்க மாயவனின் முழுவுருவைக் கர்ச்சித்து முழங்கி வரும் நரசிம்மமூர்த்தியாக நமக்குக் காட்டியருளினாள்.

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடியவள் தீங்கு நினைந்த கம்சன் வயிற்றில் தீ யெரியாகி நின்ற திருமாலைப் போற்றுகின்றாள்.

"அன்றிவ் வுலகம் அளந்தாய்! அடி போற்றி!" எனும்போது அறக் கருணையையும், "சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல் போற்றி!" எனும் போது மறக்கருணையையும் ஒருங்கே காட்டுகின்றனள்.

கன்றுக் குட்டியாக வடிவம்எடுத்து வந்த வத்சாசுரனை எறிதடியாகக் கொண்டு, விளாமரத்தில் கனியாக உருவெடுத்திருந்த கபித்தாசுரனை எறிந்து இருவரையும் அழித்த மறச் செயலையும், கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து, மழையைத் தடுத்து மக்களைக் காத்த அருட் செயலையும் "கன்று குணிலா எறிந்தாய்! கழல் போற்றி! குன்று குடையாய் எடுத்தாய்! குணம் போற்றி!" எனும் இரண்டே வரிகளில் எத்துணை எழில் படக் கூறுகின்றாள்!

அறம்-மறம் ஆகிய இரு குணங்களின் ஒருங்கிணைப்பை "வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை" என்று இறுதிப் பாடலின் முதல் வரியில் எத்துணை அழகாக முத்தாய்ப்பு வைத்தனன்!

எனவே மதுவளர்கவிதைவரிகளால் மங்கையவள் வரைந்த கோலங்கள் திருப்பாவையும், "நாச்சியார் திருமொழி" கூறும் ஒரு நூற்று நாற்பத்து மூன்றும் எனலாம். அத்தனையும் அமுதூறும் தித்திப்புக் கவிதைகள்; அச்சுதன் கோவிந்தனைச் சொற்கொண்டு பூசிக்கும் தூமலர்கள்!

ஓங்கி உலகளந்த உத்தமன் அருங்குணங்களை ஒரு சில சொற்கொண்டு அளந்து விடமுடியுமா? விண்ணகத் தேவரும் அறியமுடியாத விழுப்பொருளைக் கண்ணார் அமுதமாய்க் காட்டுகின்றாள். அது கோதை ஒருத்திக்கே கை கூடியது.

எவராலும் அறிதற்கு அரியவனை ஆண்டாள் அறிந்து அனுபவித்தற்கு எளிமையானவனாக எடுத்தியம்புகிறாள் எனில் அவள் மாயன் மணிவண்ணனின் மனமெல்லாம் நிறைந்து நிற்கும் எம்பெருமாட்டியன்றோ! பார்வண்ண மடந்தை என்கிற பூமி பிராட்டியாரே கோதை என்ற திருநாமம் சாற்றி இம்மண்ணுலகை வாழ்விக்கத் திருவுள்ளம் பற்றி அவதரித்தவள் அல்லவா! ஜ

# சூரியனார் கோயில்

திரு. ஆர். சுப்பராவ்
திருக்கோவிலூர்.

உலகில் உள்ள மிகத் தொன்மையான ரிக்வேதத்தில் சூரியன் போற்றப்படுகிறான். தொல்காப்பியத்திலும் சிலப்பதிகாரத்திலும் சூரிய வழிபாடு கண்டுள்ளது. படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் புரிந்து நாஸ்திகர்களாலும் மறுக்க முடியாத வகையில் சூரியன் கண்கண்ட தெய்வமாக காட்சி அளிக்கிறான்.

தஞ்சை மாவட்டம் ஆடுதுறைக்கு வடக்கே 2 கி. மீ. தூரத்தில், உள்ள சூரியனார் கோயில் மட்டுமே 'இந்திய துணைக்கண்டத்தில்' உள்ளஒரே நவக்கிரக க்ஷேத்திரம். இங்கு நவக்கிரகங்களுக்குத் தனித்தனிக்கோயில்கள் உள்ளன. திருஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் பாடப் பெற்ற திருமங்கலக்குடிக்கு அருகில் இத்தலம் விளங்குகிறது. கும்பகோணத்திலிருந்தும் மயிலாடுதுறையிலிருந்தும் பஸ் வசதி உண்டு.

இமயமலைச் சாரலில் தங்கியிருந்த காலவ முனிவர் என்பவர் ஒரு சமயம் தன்னுடைய எதிர் காலப் பலனைச் சோதித்துப் பார்த்தார். தனக்கு விரைவில் தொழுநோய் பீடிக்கும் காலம் நெருங்கியுள்ளதைக் கண்டு திடுக்கிட்டார். மனம் வாடினார். அந்நோயை தடுக்கும் உபாயத்தை உடனிருந்த முனிபுங்கவர்களிடம் அறிந்து தீர்க்கும் முயற்சியில் முனைந்தார். சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது ஆகிய நவக்கிரகங்களை நோக்கி தவம் கிடந்தார். அதன் பயனாய் நவக்கிரகங்கள் ஒரு சேரக் காலவ முனிவரின் எதிரில் தோன்றி தொழுநோய் நீங்க வரம் வழங்கினார்கள்.

பிரமன் இதனை அறிந்து வெகுண்டார். நவக்கிரகங்களை நோக்கி "காலவ முனிவருக்கு தொழுநோய் நீங்க வரம் அளித்த உங்கள் செயல் வரம்பு மீறியதாகும். எனவே நீங்கள் தண்டனையைப் பெற்றேதீரவேண்டும். நீங்கள் அனைவரும் பூலோகத்தில் பிறந்து தொழுநோயால் உழல்வீர்களாக" என்று சாபமிட்டார்.

நவக்கிரகங்கள் மனம் வருந்தி பிரமனிடம் தங்களை மன்னித்து சாப நீக்கம் அருளும்படி வேண்டினர். பிரமன் மனம் இரங்கினார். "பூவுலகில் தென் பாரதத்தில் காவிரி நதிக்கரையில் அர்க்க (வெள்ளெருக்கு) வனத்தை அடைந்து கார்த்திகை மாதம் முதல் ஞாயிற்றுக்கிழமை தொடங்கி பன்னிரண்டு ஞாயிறுகள் மும்மூர்த்திகளை நோக்கி தவம் செய்யுங்கள். திங்கட்கிழமை தோறும் காவிரியில் நீராடி திருமங்கலக்குடியில் கோயில் கொண்ட புராணவரதீஸ்வரரையும்



உஷா, பிரத்யுஷா (சாயா) சமேதா ஸ்ரீ சூரியன்



சூரியனூர் கோயில்

(பிராணநாதர்) மங்களநாயகியையும் வழிபடுங்கள் சாபம் நீங்கும்'' என்று கூறி அருளினூர்.

நவக்கிரகங்களும் அவ்வாறு பிரமனது சாபவலிமையால் தொழுநோயால் பீடிக்கப்பட்டு வருந்தி கார்த்திகை மாதம் விரதம் தொடங்கி தவம் புரிந்தனர். மும்மூர்த்திகளும் மகிழ்ந்து அவர்கள் நோய் நீங்க அருளினூர்கள். சிவபெருமான் அவர்களுக்கு காட்சியளித்து, ''இன்று முதல் இததலம் உங்களுடைய தலமாகும். இங்கு வந்து பல்வகைத் துன்பங்களேயும் சகித்துக் கொண்டு உங்களே வழிபடும் அன்பர்களுக்கு நீங்களே அருள் வழங்கி வாருங்கள்'' என்று வரம் அளித்தார். சிவபெருமான் தம்சூலத்தால் சூர்யபுஷ்கரணி முதலிய நவதீர்த்தங்களே உண்டாக்கினூர்.

"இந்த நவக்கிரக தலத்துக்கு வந்து ஏற்படும் இன்னல்களே மனமுவந்து ஏற்று நவதீர்த்தங்களில் நீராடி வழிபடும் பக்தர்கட்கு மட்டும் நவகோள்களின் அருளேப் பெறுவார்களாக! சூரியனே முதன்மையாகக் கொண்டு நவகோள்கள் இங்குத் தவம் புரிந்ததால் நவகோள்களுக்கும் இங்கு தனித் தனி கர்ப்பகிரகங்களுடன் ஆலயம் அமைந்து சூரியனூர் க்ஷேத்ரம் என்று புகழ் ஓங்குக!'' என்று சிவபெருமான் அறிவித்தார்.

ஸ்ரீ சூரியன், உஷா, பிரத்யுஷா (சாயா) தேவிகளுடன் தனிக்கோயிலில் எழுந்தருளியுள்ளார். நவ நாயகர்கள் அனேவரும் வாகனமும் ஆயுதமும் இன்றி இரண்டு கரங்களுடன் அனுக்ரகிரக மூர்த்திகளாகக் காட்சி தருகின்றனர்.

இத்தலத்திற்கு வந்து தங்கியிருந்து சூரியபகவானே பரீட்சித்து மகாராஜா சந்திரபகவானே சித்ராங்கத பாண்டியன் அங்காரக பகவானேப் புரூரவசு, புத பகவானே சோமசன்மன், குரு பகவானே இந்திரன், சுக்கிர பகவானே தூமகேது, சனி பகவானே நளமகாராஜா ஆகியோர் முறையாக வழிபட்டு நலம் பெற்றூர்கள்.

இன்று இந்த ஆலயத்தில்பாலாலயம் அமைக்கப்பட்டுத் திருப்பணி முற்றுப் பெருமல் நிற்கிறது. திருப்பணி முற்றுப் பெற்று மஹா கும்பாபிஷேகம் நடைபெற திருவாவடுதுறை ஆதினம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள் அருளாசியுடன் முயற்சி தொடங்கப்பட்டுள்ளது. ஆத்திகப் பெருமக்கள் இந்த அரும் பணிக்கு பெரும் பொருளுதவி அளித்திடுமாறு பக்தர்களும் யாத்திரிகளும்கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள்

ஃ ஃ ஃ

# உண்மையான பக்தி

"அறுகயிறு ஊசலானேன் அதிகை
வீரட்டனுரே"

இது அப்பர் சுவாமிகளின் வாக்கு.

'பல காலமாக எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்துத் தவிக்கின்ற அடியேனுக்கு திருவதிகைப் பெருமான் வந்து தமக்கை மூலம் 'நமசிவாய' என்ற ஐந்தெழுத்து உபதேசம் செய்வித்தவுடன், ஞானமெல்லாம் சித்திக்கப்பெற்று, கயிறு அறுபட்ட ஊஞ்சல் நிலத்தில் விழுந்ததுபோல், பஞ்ச மலங்கள் அறுபட்டு, உன் திருவடிக்கு வந்துவிட்டேன்' என்பது மேலே குறித்த அப்பர் வாக்குக்கான பொதுவான விளக்கமாகும். ஊஞ்சல் என்று அப்பரடிகள் குறித்தது ஊன்றிக் கவனிக்கத்தக்கது. அப்படியும், இப்படியும் ஆடிவருவது ஊஞ்சலின் இயல்பாகும். ஒரு நிலையில் அது


பேராசிரியர். என் வேணுகோபாலன்,
மதுரை.


நில்லாது. பூலோகம், சொர்க்க லோகம், நரகலோகம் என்று நாமும் மூன்று லோகங்களுக்கும் போவதும் வருவதுமாக இருக்கிறோம். இது ஊழிக்காலமாக நடந்து வருகிறது.

இப்போக்குவரத்து நிற்க வேண்டுமானல், அதற்கு ஒரு வழிதான் உள்ளது. இறைவனடி சேர்வதே அந்த வழி.

இறைவனடி சேர்வதற்கான வழி வகைகள் :

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று பல வழிகள் இருக்கின்றன.

இறைவனுக்காகப் பூக்கொய்தல், கோவிலை மெழுகிச் சுத்தப்படுத்துதல் போன்ற காரியங்களில் நாம் ஈடுபடலாம். இவை இறை பணியாகும். இங்கே உடல் பிரயாசை பெரும்பகுதியாகவும், உணர்வு சிறு பகுதியாகவும் அமையும். இந்த வழி சரியை எனப்படும்.

சிவ வழிபாடு போன்ற செயலையும் மக்களுக்குத் தொண்டாற்றி அதை இறைவனுக்கு அர்ப்பணமாக்கிச் செய்யும் நரசேவையையும் கிரியை வழி எனலாம். இங்கு உடல் பிரயாசையும் உணர்வும் சமமாக அமையும்.

இடது நாடியையும் வலது நாடியையும் நடு நாடியில் சேர்த்து, சிரசில் பிரமரந்திரத்தின்மேல் விளங்கும் சிவபரம்பொருளை உணர்வினுல் அடைந்து அனுபவித்தல் யோகம் எனப்படும்.

ஞான மார்க்கமாகவும் கடவுளை அடையலாம். ஆனுல் அது கடினமான பாதை. 'நான் சரீரமல்லன்; மனமல்லன்; புத்தியுமல்லன்; துயரத்துக்கும் வருத்தத்துக்கும் நோய்க்கும் அப்பாற்பட்டவன். பொறிகளின் கட்டுப்பாட்டில்நான்இல்லை என்றுசொல்வது எளிது. ஆனுல் அக்கருத்தைப் புரிந்தும் உணர்ந்தும் செயல்படுவது மிகவும் கடினம்.

மேற்கூறிய சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலிய பாதைகளில் எதையாவது அவரவர் வசதி, வாய்ப்பு, பக்குவத்துக்கேற்றாற்போல் தேர்ந்தெடுத்து, இறைவனடி சேர முயலலாம்.

பக்தி மார்கத்தின் மூலம் இறைவனடி சேர்வதும் ஞானம் எய்துவதும் சாத்தியமே. பக்தனுனவன் கடவுளின் திருவடியில் பக்தியை வளர்க்கிறுன். கடவுளின் குணங்களையும் நாமத்தையும் பாடி, ஆனந்தம் அடைகிறுன் பக்தன். தன் ஐம்புலன்களை அடக்குவதற்கு அவன் சிரமப்பட வேண்டியதில்லை. அவை தாமாகவே அடங்கிவிடும்.

பக்தி செய்வது என்பது மனப்பூர்வமாக ஒருவன் தன்னை இறைவனிடம் ஒப்படைத்து அன்பால் மனங்கசிந்து உருகுவதாகும்.

தமோ குணமுள்ள பக்தன், முரட்டுத்தனமாகத் தன் பக்தியை வெளிப்படுத்துவான். இறைவனுக்குப் பிரீதி உண்டுபண்ண ஆடு, மாடு, கோழி போன்றவற்றை அவன் பலியிடுவான்.

ரஜோ குணமுள்ள பக்தன் தன் பக்தியை விளம்பரப்படுத்து முகமாக நடந்துகொள்வான். நைவேத்தியம் என்ற பெயரில் அறுசுவை உணவை அவன் படைப்பான்; பகட்டாக உடுப்பான்; எடுப்பாக நெற்றிச் சின்னம் அணிவான்; கழுத்தில் மாலைகளைப் போட்டுக் கொள்வான். கடைக்காரன் தன் சாமான்களை விரித்து வைத்து விளம்பரமாக விற்பது போல், ரஜோகுணப் பக்தன், தன் பக்தியை உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுவான்.

சத்துவ குணமுள்ளவன் விளம்பரமெதுவுமின்றி ஓசைப்படாது தன் காரியங்களைச் செய்வான்; பெரும்பாலும்மானசீகமாகவேஇறைவனிடம் பக்தி பண்ணுவான். அவனுக்கு உலக விவகார நாட்டம் குறைவாகவே இருக்கும்; எப்பொழுதும் ஈஸ்வர சிந்தனையே மேலோங்கி இருக்கும். அவன் தனது ஆத்ம சாதனங்களைப் பிறர்க்குக் காட்டிக் கொள்ளமாட்டான். மனிதரை முகஸ்துதி செய்யாது, தெய்வத்தை மட்டுமே வாழ்த்துவான்.

சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் ஆகியவை மாயா சக்தியின் சொரூபமாகையால் பக்தர்களின் போக்கில் நாம் வேறுபாடு காண்கின்றோம்.

மேற்கூறிய முக்குணங்களையும் தாண்டியவர்கள் பரமஹம்சர்கள் எனப்படுவர். அவர்களின் போக்கு அலாதியாக இருக்கும். பாலர்கள் போல் அவர்கள் நடந்து கொள்வர். ராமகிருஷ்ணன் (விவேகானந்தரின் குரு) அப்படிப்பட்டவர்களுள் ஒருவர்.

நம் பக்தியை ஏற்று இறைவன் அருள் செய்ய வேண்டுமானால், நம் மனம் அலையாமல் ஒருமைப்பட்டு ஈஸ்வரனிடமேலயித்துவிடவேண்டும். நம்மை முழுமையாக அவனிடம் ஒப்படைத்து 'அவன் விட்ட வழி' என்று ஒரே சிந்தையுடன் நாம் நடந்து கொள்ள வேண்டும்.

முன்னொரு காலத்தில் விக்கிரமாதித்த மன்னன் காடாறு மாதம் வாசம் பண்ணுவதற்கு, விந்திய மலைக்குப் போயிருந்தான். அங்கே, காளி கோவிலுக்கு அருகாமையில், ஒருவன் யாகம் பண்ணிக் கொண்டிருந்தான். விக்கிரமாதித்தன் வந்ததையும் பாராது, தன் போக்கில் மேலே ஆகாயத்தைப் பார்ப்பதும் கீழே யாக குண்டத்தைப் பார்ப்பதுமாக அவன் செயல்பட்டான். 'அப்பா! நீ எவ்வளவு காலமாக யாகம் செய்கிறாய்?' என்று மன்னன் வினவ,'1000 ஆண்டுகளாகச் செய்கிறேன்' என்று பதில் சொன்னான். 'எதைக் குறித்து இந்த யாகம்?' என்று மன்னன் கேட்க' 'உன்னிடம் கூறேன். காளி ஆகாயத்தில் தோன்றுவாள். அவளிடம் சொல்வேன்' என்று அவன் விடை கூறினான். '1000ஆண்டுகளாக யாகம் செய்தும், காளி காட்சி தரவில்லையா? காளியை வரவழைக்கச் சுருக்கமான வழி இருக்கிறது' என்று விக்ரமாதித்தன் சொன்னான். 'நான் சாஸ்திரம் சொல்லியபடி யாகஞ் செய்கிறேன். நீ சொல்வதை நம்பேன்' என்றான் அவன். 'உன் தலையை வெட்டி, காளிக்கு பலி கொடு. காளி வருவாள்' என்றான் அரசன். 'நீ கூறுவது எந்த சாஸ்திரத்திலும் இல்லையே. எதையும் சாஸ்திர முறைப்படிதான் செய்வேன்' என்று பதில் கூற, 'உனது சாஸ்திரம் காளிக்குத் தெரியாது. இதேபோல் உன் போக்கில் நடந்து கொண்டால் காளி ஒரு நாளும் வரமாட்டாள்' என்று மன்னவன் கூறினான். 'நீ சொன்னபடி நீயே செய்து நிரூபித்துக் காட்டு' என்று அவன் சவால் விட, விக்கிரமாதித்தன் தன் தலையை வெட்டமுயல, காளி பிரசன்னமாகித் தடுத்துவிட்டாள். 'அன்னையே, 1000ஆண்டுகளாக இவன்யாகஞ்செய்தும் நீ ஏன் காட்சி கொடுக்கவில்லை?' என்று அரசன் கேட்க, 'இந்தப் பக்தன் பல சாஸ்திரங்களைக் கற்றும் அவற்றின் குறியாகிய என்னிடம் மனம் லயிக்காது தத்தளிக்கிறான், எதையும் ஒரே உள்ளத்துடன் செய்யும் பக்குவம் இவனிடம் இல்லை. ஆகவே, நான் காட்சி தரவில்லை' என்றாள் காளி. பின்னர் விக்கிரமாதித்த மன்னனின் வேண்டுதலுக்கிணங்க, அவனுக்குக் காளி வரமளித்ததாகக் கதைபோகும்.

மேற்கூறிய கதையின் மையக் கருத்தை நாம் கவனிக்க வேண்டும். இறைவனுடன் நம்மை லயப்படுத்தி, முழுமையாக நம்மை அவனிடம் ஒப்படைத்துவிட வேண்டும். 'எல்லாம் அவன் விட்ட வழி' என்று ஒரே சிந்தையுடன், நாம் நடந்து கொள்ள வேண்டும். அதுவே உண்மையான பக்தி.

அதனால் பலன் உண்டா என்றால் நிச்சயம் உண்டு. இறைவனின் கருணை குறித்து நாம் ஐயுறத் தேவை இல்லை. யாருக்கு, எப்பொழுது, யார் மூலம் அருள வேண்டும் என்னும் இறைவனின் கணக்கில் என்றுமே பிழை ஏற்படாது; ஏற்பட்டதுமில்லை. சரியை, கிரியை, யோகம் என்பனவெல்லாம் முற்பிறவியிலேயே முடிந்துவிட்டதால், திருஞானசம்பந்தருக்கு மூன்று வயதிலேயே ஞானம் சித்தித்தது. திருநாவுக்கரசர் பல்லாண்டுகள் உழைத்து (உழவாரப் பணி செய்து) ஞானம் கைவரப் பெற்றார். மஹாபாரதத்தில் கடவுள் (கண்ணன்) தரும வழி பிசகிச் செயல்பட்டு அக்கிரமசாலிகளைத் துடைத்தார். பீஷ்மர், கர்ணன், துரோணர், துரியோதனன் முதலியோரைச் சாதாரண நடைமுறையில் தோற்கடிக்க முடியாது. அவ்வளவு வல்லமை அவர்களிடம் இருந்தது. ஆகவே, நெருக்கடியின்போது அசாதாரணமாக நடந்து கொண்டார் கடவுள்.

"அறநெறிகள் அனைத்தையும் கையாண்ட பிறகு, இறுதியில், அந்த அறநெறியிலிருந்து பிசகுவதன் வாயிலாக மட்டுமே எதிரியை ஒழித்துத்தள்ளலாம் என்பது உறுதியானால், தைரியத்துடன் அச்செயலில் ஈடுபடு. இம்மியளவும் தயங்காதே". இதுவே கண்ணபிரானின்அலாதியானசெய்தி.

# கீதை காட்டும் நல்வழி

## மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 28

பகவானது அமுத மொழிகளைக் கேட்ட அர்ஜுனனிடம் ஏற்பட்ட மாற்றம் குறித்து அவன் சொல்லுகிறான்.

'நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்தா:'—எனது மோஹம் அழிந்தது நினைவு கைவரப் பெற்றேன். இது வரை அர்ஜுனன் யோகத்தின் வசப்பட்டு இருந்தான் என்பதை இப்பொழுது உணர்கிறான். காமாலை வியாதியால் வருந்துபவனுக்கு அந்த வியாதி அவனிடம் இருக்கும் வரை பார்க்கும் பொருள்கள் யாவும் மஞ்சளாகத் தோன்றும். மயக்க நிலையில் உள்ளவனுக்கு நடுப்பகலிலும் இருண்டு காணப்படும். அத்தகைய மயக்கத்திற்கு இதுகாறும் அர்ஜுனன் உட்பட்டிருந்தான். இப்பொழுது பகவானது போதனையால் அந்த 'மயக்கம் ஒழிந்தது' என்று கூறுகிறான்.

மயக்கம் ஒழிந்துவிட்டால் நமது யதார்த்த நிலை நமக்குப் புலனாகும். மயங்கிய நிலையில் ஒருவன் இருக்கும் வரை தான் எங்கே எப்படிக் கிடந்தோம் என்பது தெரியாது. மயக்கம்

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

தெளிந்த பிறகே அவனுக்கு அவனது நிலைமைபுலனாகும். அதுபோல அர்ஜுனன் தான் இதுவரை சொல்லியது அனைத்தும் மயக்கத்தின் காரணமாக என்பதை உணர்ந்து இப்பொழுது அந்த மயக்கம் நீங்கி சுய உணர்வு பெற்றுவிட்டதாகக் கூறுகிறான். தனது கடமையை அவன் இப்பொழுது உணர்கிறான். தான் அழியும் உடலல்ல அழியாத ஆத்ம சொரூபம் என்ற பேருணர்வு வரப்பெற்றவனாக உணர்கிறான்.

இந்த உயர்நிலை அவனுக்கு எதனால் வந்தது என்பதை அடுத்துத் தெரிவிக்கிறான்.

'த்வத் ப்ரஸாதாத்' – 'கண்ணா! மாதவா! மதுசூதனா! உனதருளால் தான் நான் என் மயக்கம் ஒழிந்து உணர்வு வரப்பெற்றேன்' என்று அர்ஜுனன் கூறுகிறான். இங்கே அர்ஜுனன் மூலம் நாம் ஒரு முக்கிய உண்மையை உணரக் கடமைப்பட்டிருக்கிறோம். என்னதான் மனித முயற்சி இருந்தாலும் இறையருள் இல்லாவிட்டால் நம் செயலில் வெற்றி கிட்டாது. த்ருஷ்டம் என்றால் கண்ணுக்குப்புலப்படுவது என்று பொருள். அத்ருஷ்டம் என்றால் கண்ணுக்குப் புலனாகாதது என்று பொருள். நாம் செய்யும் முயற்சி நமக்குத் தெரிகிறது. அது 'த்ருஷ்டம்'. செய்யும் செயலில் வெற்றி கிட்டுமா, கிட்டாதா என்ற கேள்வி எழுகிறது. அத்ருஷ்டம் இருந்தால் வெற்றி கிட்டும் என்கிறோம். இறைவனது அருள் தான் 'அத்ருஷ்டம்' எனப்படுகிறது. அது நமக்குத் தெரியாது, மறைந்து இருப்ப எனவே மனித முயற்சியுடன் இறையருளும் சேருகையில் வெற்றிநிச்சயம் வெறும்மனிதமுயற்சி மட்டும் இருந்து இறையருள் இல்லையென்றாலும் வெற்றி கிட்டாது. அது போல் இறையருள் வெளிப்படுவதற்கு மனித முயற்சி தேவைப்படுகிறது. எனவே இரண்டும் ஒன்றிணைகையில் நாம் ஈடுபடும் செயல்கள் அனைத்தும் வெற்றிகரமாக முடிகின்றன. 'கண்ணா! நான் இதுகாறும் என்னால் எல்லாம் முடியும் என்று இறுமாந்திருந்தேன். இப்பொழுது அந்த மயக்கம் என்னைவிட்டு அறவே நீங்கிவிட்டது. கண்ணா! என்னால் ஆவதொன்றில்லை எல்லாம் உனதருளால் என்பதை உணர்ந்து கொண்டேன்', என்று அர்ஜுனன் மொழிகின்றான்.

நாமும் நமது அன்றாட வாழ்வில் அனுபவ பூர்வமாக இதைத்தானே உணர்கிறோம். இருந்தாலும் அஞ்ஞானத்தின் காரணமாக அறியாமை மற்றும் ஆணவத்தின் காரணமாக அடிக்கடி இதை மறந்து விடுகிறோம். உண்மையான பக்தன் இந்த உண்மையை ஒருக்காலும் மறக்க மாட்டான். 'எல்லாம் பகவான் செயல்' என்று அவனது தாள்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தனது கடமைகளைச் செவ்வனே செய்பவன் தான் உண்மையான பக்தன், யோகி, ஞானி.

'ஸ்தித: அஸ்மி' 'கண்ணா! நான் உறுதியாய் இருக்கிறேன்' என்பது இதன் பொருள். அப்படியானால் இது வரை 'என்னிடம் உறுதி இல்லை' என்பதாகிறது. புயற்காற்றில் சாதாரண செடி, கொடிகள் மற்றும் மரங்கள் போன்றவை வேருடன் பிடுங்கி எறியப்படுகின்றன. ஆனால் மலை ஒன்றும் எதற்கும் அசையாது உறுதியுடன் இருக்கிறது. அதுபோல 'கண்ணா! இதுவரை ஞானம் கைவரப் பெறாததால் என் மனம் புயலிடைப் பட்ட சருகுபோல அலைக்கழிந்தது. இப்பொழுது நான் ஸ்திதப்ரக்ஞன் ஆகிவிட்டேன். உறுதியான ஞானத்தைப் பெற்று விட்டேன்', என்று அர்ஜுனன் கூறுகிறான். இறையுணர்வு

## ஜீவாத்மா

'நான்' என்று சொல்லுகிறோமே, அது ஜீவாத்மா அல்லவா? அந்த ஜீவாத்மா ஸ்ரீமந் நாராயணனுடைய சொத்து என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். திருட்டு என்றால் வேறு ஒருவனுடைய சொத்தைத் தம்முடையது என்று அனுபவிப்பது தானே! ஆகையால், பரமாத்மாவின் சொத்ததான ஜீவாத்மாவை நம்முடையது என்று நினைத்தால், அது பெரிய திருட்டாகி விடுகிறது. அம்மாதிரி நினைக்காமல் நான் என்கிற ஜீவாத்மா பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனுடைய சொத்து என்று எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருங்கள். பாவம் பண்ணுகிற புத்தி கொஞ்சம் கொஞ்சமாக மாறிவிடும்.

திரு. வி. ஸ்ரீதர்-கோவை. —ஸ்ரீமத் அழகிய சிங்கர்.

வரும் வரை வாழ்க்கை உறுதியற்றிருக்கும். மனம் அலைக்கழியும், நிலை தடுமாறும். ஆத்ம போதம் வந்து விட்டால், பரஞானம் வந்துவிட்டால் பிறகு இன்பமே எந்நாளும், துன்பமில்லை.

'கத ஸந்தேஹ:' எனது ஐயங்கள் அகன்றுவிட்டன' எது ச்ரேயஸ், எது ப்ரேயஸ். எது மேலானது. எது கீழானது என்பது தெரியாமல் தடுமாறிய அர்ஜுனன் இப்பொழுது கண்ணனின் அருளால் ஐயங்கள் அனைத்தும் அறவே நீங்கப் பெற்று வணகிவிட்டான். ஆத்மஞானத்தைப் பெற்றபின் எந்தவித ஐயமும் நிலவாது.

'தவ வசனம் கரிஷ்யே' - 'உனது சொற்படி செய்வேன். மனம் மாறிய அர்ஜுனனின் வாக்குறுதி இது. 'முதலில் 'போர்புரிய மாட்டேன்' என்று சொன்னவன் இப்பொழுது 'கண்ணா! உம் சொற்படியே நடப்பேன்' என்று உறுதியளிக்கிறான். மயக்கம் நீங்கியதன் விளைவு இது. அஞ்ஞானம் நீங்கி ஞானம் பிறந்ததன் விளைவு இது.

கிருஷ்ணார்ஜுன ஸம்வாதம் இத்துடன் நிறைவு பெறுகிறது. இனி அடுத்துவரும் சில சுலோகங்கள் ஸஞ்ஜயரின் முடிவுரையாக அமைகின்றன.

ஸஞ்ஜய உவாச:

இத்யஹம் வாஸுதேவஸ்ய
பார்த்தஸ்ய ச மஹாத்மன: |
ஸம்வாதமிம மச்ரௌஷம்
அத்புதம் ரோம ஹர்ஷணம் ||

(18-74)

"இங்ஙனம் வாசுதேவருக்கும் மஹாத்மாவான பார்த்தனுக்கும் இடையில் நிகழ்ந்த மயிர்க்கூச்சு உண்டு பண்ணும் அற்புத சம்பாஷணையை நான் கேட்டேன்".

எங்கோ தொலைவில் போர்க்களத்தில் நிகழ்ந்த ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தை அரண்மனையில் இருந்த ஸஞ்ஜயர் கேட்டார்.

மயிர்க் கூச்செறியும் சம்பாஷணை இது என்று ஸஞ்ஜயர் குறிப்பிடுவது அவரிடம் ஏற்பட்ட மாற்றத்தைக் குறிப்பிடுகிறது. உள்ளத்தில் பேருணர்ச்சி ஏற்படுகையில்தான் மயிர்க்கூச்சு ஏற்படும். கீதையை சொன்னவர் ஸாக்ஷாத் பகவான். கேட்பவர் அர்ஜுனன். சொல்லப்பட்ட விஷயமோ மிகப் புனிதமானது. இம் மூன்று காரணங்களாலும் தனக்கு மயிர்க்கூச்சு ஏற்பட்டதாகக் குறிப்பிடுவது பொருத்தமானதே. இது வரை பல்வேறு மற்றப் பெயர்களால் அழைக்கப்பட்ட அர்ஜுனன் ஈண்டு மஹாத்மா என்று அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. சாதாரண மனிதன் மஹாத்மாவாக எப்பொழுது மாறுகிறான்? எப்பொழுது பரமாத்ம ஞானம் அவனிடம் மிளிர்கிறதோ, எப்பொழுது இறையுணர்வு அவனிடம் ஏற்படுகிறதோ அந்த க்ஷணமே எத்தகைய பரமாத்மாவும் மஹாத்மாவாக மாறிவிடுகிறான். மனிதன் மட்டுமல்ல மற்ற எந்த ஜீவராசியும் இத்தகைய பெருநிலையை அடையும் பொழுது மகத்வம் வாய்ந்ததாக ஆகி விடுகிறது.

அடுத்து ஒரு ஐயம் எழுகிறது. தொலைவில் இருந்து கொண்டே கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தை ஸஞ்ஜயர் எப்படிக் கேட்டார் என்பதே அது. அதற்கான பதில் அடுத்த சுலோகத்தில் காணப்படுகிறது.

வ்யாஸப்ரஸா தாச்ருதவான்
ஏதத் குஹ்யமஹம் பரம் |
யோகம் யோகேஸ்வராத் க்ருஷ்ணாத்
ஸாக்ஷாத் கதயத: ஸ்வயம் ||

(18-75)

'வியாசர் அருளால் இந்த மேலாம் ஆழ்ந்த யோகத்தைத் தாமே சொன்ன யோகேசுவரன் கிருஷ்ணனிடமிருந்து நான் நேரே கேட்டேன்.'

அர்ஜுனனுக்கு தமது விஸ்வ ரூபத்தைத் தரிசிப்பதற்காக திவ்ய சக்ஷு அல்லது ஞானக் கண்ணை பகவான் வழங்கியது போல ஸஞ்ஜயருக்கு போர்க்களக் காட்சியைக் காண்பதற்கான ஞானக் கண்ணை வ்யாஸர் வழங்கினார். அத்தகைய ஞானக்கண்ணைப் பெற்ற ஸஞ்ஜயர் யோகேஸ்வரனை ஸ்ரீ கிருஷ்ணர் மிகச் சிறந்த யோகத்தை அர்ஜுனனுக்குப் புகட்டியதை அரண்மனையில் இருந்து கொண்டே நேரில் கேட்டார். நாம் இன்று டி. வி. பார்ப்பது போல தெய்வீக சக்தியால் அன்று ஸஞ்ஜயர் அதைக் கண்டு ரசித்தார். மஹாத்மாக்களால் ஆகாதது எதுவுமில்லை.

(தொடரும்)



# சிவ சிவ... அரகர

திரு. ர. வேங்கடரத்தினம்
நெய்வேலி

சிவ நாமத்தின் பெருமை உணர்ந்த சிவனடியாருள் திருமூல நாயனுர் ஒருவர். அவர்க்கு இவ்வளவு பெருமை மிகுந்த சின்னஞ்சிறு நாமத்தை ஓதாது காலத்தை வீணுக்குகிருர்களே என்று தீவினையாளர்கள்பால் ஒரு வருத்தம். நீளத்தில் நாமமோ வெகு சிறியது. இரண்டே எழுத்து—சி—வ! கூறினல், பயனே ஏராளம். சாட்சாத் தேவராகவே ஆகிவிடலாம். அத்தகைய ஆற்றல் படைத்த அரிய திரு நாமம். விடுவார்களா வாய்ப்பை?

> சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
> சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
> சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்
> சிவ சிவ என்னச் சிவ கதிதானே

(2716)

பாவம் செய்நவர்களுடைய பழவினையையெல்லாம் போக்கவல்லது சிவ நாமம். தீவினைகள் தீர்ந்து போகும் சிவ நாமம் சொன்னல், ஆனல் அவர்கள் சொல்லமாட்டார்கள். சொன்னல்தான் பாவம் போய்விடுமே?

பாவம் தீர்வது மட்டுமா? தேவராகவே ஆகிச் சிவகதிப் பெற்றுச் சிவானந்தத்தில் மூழ்கித் திளைக்கலாம். இதேபோல், இன்னெரு பாடல். சிவ சிவ என்பதை அரகர என மாற்றிக் கூறுவார் வருமூலர்.

> அர கர என்ன அரிய தொன்றில்லை
> அர கர என்ன அறிகிலர் மாந்தர்
> அர கர என்ன அமரரும் ஆவர்
> அர கர என்ன அறும் பிறப்பன்றே.

(916)

அர கர என்பது ஒன்றும் கடினமில்லை. சின்னஞ்சிறு குழந்தை கூடச் சொல்லிக் கொடுத்தால், சொல்லி விடும். அரிது எனில் இரண்டு பொருள் உண்டு. ஒன்று, கடினம். இன்னென்று சிறப்பான. அர கர என்பதைவிடச் சிறந்தது ஏதுமில்லை. அத்தகைய தலைசிறந்த மந்திரம் அது. 'நம: பார்வதீ பதயே' என ஒருவர் எடுத்துக் கூற, குழுமியுள்ளோர் ஒரு குரலில் 'அர கர மகாதேவ' என அரன் நாமத்தை எதிரொலிக்கும் வழக்கம் இப்படி வந்தது தான். 'அரன் நாமமே சூழ்க' என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கில் மலர்ந்த மங்கல வாசகம் ஆகும்.

இத்தகைய அர கர நாமம் சொல்ல மக்கள் அறிவதில்லை. சொன்னல். அமரர் ஆகிவிட முடியும். ஏன், சொன்னவுடனேயே நம் பிறவித்தளை அறுந்து போகும். மீண்டும் மீண்டும் செத்துப் பிறந்து கொண்டிருக்கிற தொடர்கதை முற்றுபெறும். அர நாமத்தை ஓத, உடன் அப்பிறப்பே சிறப்பு அடைகிறது. அரும் பிறப்பு அன்றே ஆகிவிடும். இக்கீழ் நிலை மாறிவிடும், அர நாமத்தின் மகிமையினல்!

ஈசன் திருப்பெயரை ஓதி வருதல் நாம பஜனையாகும். திருமூலர் இவ்வாறு இறைவன் திருநாமத்தை ஓதி வருமாறு உபதேசிக்கும் பாடல்கள் பல உண்டு.

மேலே கண்ட பாடல்களில் அரன் நாமமும், சிவநாமமும் ஓதுவரை

## சிலம்பில் பிறந்த சிற்றாறு

மகாவிஷ்ணு வாமன அவதாரம் கொண்டு மாமன்னன் மகாபலியின் முடிமீது தன் திருவடியை வைத்திட திருவிக்கிரம மூர்த்தியாய் ஓங்கி வளர்ந்தபோது, அவன் திருவடியைத் தரிசிக்கும் பேறு பெற்ற பிரமன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். கமண்டல நீரால் அத்திருவடியை அபிஷேகம் செய்து அடி தொழுது வணங்கினான். கமண்டல நீர் திருவிக்கிரம மூர்த்தியின் திருவடிச் சிலம்பில் பட்டுச் சிதறியது. அது திருமாலிருஞ்சோலை என்னும் குன்றின்மீது விழுந்து சிற்றாறாக ஓடியது. எனவே அது சிலம்பாறு எனப் பெயர் கொண்டது. நூபுர கங்கை எனவும் புகழ்கொண்டது.

—ஆர். சுப்பராவ்.

அனுப்பியவர்: வி. ஸ்ரீதர்-கோயம்புத்தூர்.

அமரராக்கும் எனத் தெரிந்து கொண்டோம். அப்படி அமரர் ஆனவர்கள், அமரர் ஆனபின்பு இறை நாம ஸ்மரணையை விட்டுவிட்டார்களா?

இல்லை, தொடர்ந்து செய்கிறார்கள் என்கிறார் திருமூலர்.

அண்ணலை வானவர் ஆயிரம் பேர்
சொல்லி
உன்னுவர் உள் மகிழ்ந் துண்ணின்
றடி தொழக்
கண் அவன் என்று கருதுமவர்
கட்குப்
பண்ணவன் பேரன்பு பற்றி நின்றானே
(1505)

இங்கே நாம் முதலில் தெளிவது இறைவன் ஏதோ அர, சிவ என்ற இரண்டொரு நாமங்கள் மட்டும் பெற்றவர் அல்ல என்பதாகும். ஆம், அவர்க்கு ஆயிரம் நாமங்கள் உண்டு. சந்தேகம் இருப்பின், புரட்டுங்கள் சிவ சகஸ்ரநாமம்!

அந்த ஆயிரம் பேர்களையும் கூறி வானவர் வழிபடுகின்றனர். வெறு மனே வாய் மட்டும் பேர் சொல்லும் விஷயமல்ல இது. உன்னுவர்—மனதில் கொள்வர். பேர்களில் ஒலிக்கும் பொருளைப் புரிந்து கொண்டு, ஈசனின் பெருமைகளை உணர்ந்து அக மகிழ்வர். அந்த மகிழ்ச்சி உள்ளத்தே நிற்க, இறைவனின் திருவடி தொழுவர். கண்ணுக்குக் கண்ணாக முக்கண்ணனை எண்ணி வழிபடும் அவர்களைத் தெய்வமாக இருந்து பேரன்பு பூண்டு ஒட்டி உறவு கொண்டாடி நிற்பவர் சிவபெருமான். பண்ணவன் என்றால் ஆசானும் ஆவார் என்பது குறிப்பு. வழிகாட்டி உதவுபவர் கடவுள்!

இதேபோன்ற பாடல் இன்றொன்று.

புண்ணிய வானவர் பூமழை தூவி
நின்
றெண்ணுவர் அண்ணல் இணையடி
மந்திரம்
நண்ணுவர் நண்ணி நம என்று
நாமத்தைக்
கண்ணென உன்னிக் கலந்து
நின்றாரே.
(993)

வானவர்கள் புண்ணியம் செய்தவர்கள். அதனால்தான் வான் உலகில் இருக்கிறார்கள்! ஆனால், அத்துடன் இறை வழிபாட்டை நிறுத்திக் கொள்ளவில்லை. பூக்கள் நிறையப் பறித்து ஈசனுக்கு அர்ச்சனை செய்வர். இங்கேதான் மனம் பேசப்படுகிறது. பூக் கொய்தலும், இறைவன் திருவுருவின் மீது போடுதலும் வெறும் கரங்களின் திருப்பணி மட்டுமே. உள்ளம் ஈசனின் இணையற்ற மந்திர சக்தி வாய்ந்த நாமத்தை நினைந்து உருகுகிறது. மந்திரத்தை உள் அன்போடு ஓதி, அதைக் கண்ணெனக் கருதி, அதிலேயே நினைப்பெல்லாம் இலயிக்கச் செய்து, தன் நினைவொழுந்து, இரண்டறக் கலந்து நின்றார்களாம். நிற்கிறார்களாம்!

அர்ச்சனை எனில், இலேசான விஷயமல்ல.

நமவென்று நாமத்தை நாவில்
ஒடுக்கிச்
சிவ வென்னு நாமத்தைச் சிந்தையுள்
ஏற்றப்
பவ மது தீரும் பரிசு மதற்றால்
அவ மதி தீரும் அறும் பிறப்பன்றே.
(2717)

நமசிவாய என்ற பஞ்சாட்சரத்தை இரண்டாகப் பிரித்தாகிறது. நம என்பதில் நமது ஒடுக்கம். சிவ என்பதில் இறைவனின் எல்லையில்லாத வீச்சு. நாவில் நம எனும்போது, அடக்கமும் ஒடுக்கமும் நம் சிறுமையை உணர்த்தும். அந்த அடக்கத்துடன், சிவ நாமத்தை உதட்டளவோடு இராமல் சிந்தையுள் ஏற்றி வைத்து, இப்போது இரண்டையும் சேர்த்து நமசிவாய மந்திரத்தைக் கூறின், இந்த உலகியல் வாதனைகள் தீரும். சிவ நாமத்தின் முன், பவம் நில்லாது ஒழியும். மனதில் எழக்கூடிய தீய எண்ணங்கள் தீர்ந்து போம்.

பிறப்புதான் அப்போதே முடிந்து விடுகின்றதே. திரும்பப் பிறந்து இறந்து கொண்டிருக்கிற பேச்சிற்கே இடம் இல்லை! இதுதான் சிவகதி என்பது. இதைத்தான் சொன்னார் திருமூலர்.

சிவ சிவ என சிவகதிதானே

இவ்வளவு, அளவில் சிறிய, அழகிய ஈசன் நாமம் வேறு உண்டோ? சுலபமாக, எல்லோருமேமனத்தை ஒடுக்கி ஈசனை நினைந்து சிவ—சிவ என்று சிவ நாம ஸ்மரணை செய்யலாம். அரகர என்று அண்ணலை எண்ணி, அர நாம ஜபம் செய்து கொண்டே இருக்கலாமே!

# தமிழ் நாட்டில் வைணவம் - தோற்றமும் வளர்ச்சியும்

பேராசிரியர் : க. த. திருநாவுக்கரசு.
சென்னை.

## திருமாலின் துணைவியார் :

செல்வத்திற்கும், செழிப்பிற்கும், தெய்வமாகப் போற்றப்படும் திருமகள், திருமாலின் துணைவியாராகக் குறிப்பிடப்பட்டுள்ளார். (புற நா. 358) இத்தெய்வத்தை ‘இலக்குமி’ எனும் பெயரால் காப்பிய காலமக்கள் அறிந்து இருந்தனர் (மணி 10·200) ஆனால் ‘திரு’ எனும் பெயராலேயே சங்க கால மக்கள், திருமாலின் துணைவியைப் பெரிதும் சுட்டினர். (பதிற் 3:7; பட்டி 29; கலி. 8;14 44:7; 145:64; சிலப் 11:40 17; எடுத்துக் 21.) திருவின் செய்யோன் (சிலப் 6:61 செய்யாள் (அக நா 316:பரி 2;31; மணி 5:4; 25:34) செய்யவள் (திருக் 67) செய்யாள் (திருக் 84: நான்மணி 67:3) தாமரையினாள் (ஷ 617) பூவின் கிழத்தி (நாலடி 254:4) மா (முல்லை 2; பரி 1:2) எனும் பல பெயர்களால் திருமகள் சுட்டப்படுகிறாள்.

வேதங்களில் திரு(ஸ்ரீ) வேறாகவும், இலக்குமி வேறாகவும் சுட்டப்படுவதைப் போன்று பண்டைத் தமிழ்ச் சான்றோர் திருவையும், இலக்குமியையும் வெவ்வேறாகக் கருதவில்லை.

திருமாலின் மார்பில் மறுவும், திருவும் இருந்தனவாக அறிகிறோம். (பரி 1. 8–9: 4:59) அதனை மறுவாகவும், கௌஸ்துபமாகவும் சங்க காலத் தமிழ் மக்கள் கருதவில்லை. திருமகளே மார்பில் உறைவதாகவே நம்பினர். (பெரும்பாண் 29) மற்றும் பூமடந்தையைத் திருமாலின் மனைவியாக எண்ணும் வழக்கம் அக்காலத்தில் தோன்றவில்லை.

## நப்பின்னை யார்?

ஆயர்குலக்கொழுந்தாகிய நப்பின்னையைக் கண்ணனின் காதலியாக இளங்கோவடிகள் காட்டுகிறார். குரவைக் கூத்து ஆடிய ஆயர் மகளிர், கண்ணன், பலராமன், நப்பின்னை எனும் மூவரை முதலில் நிறுத்திக் கூத்தாடினர்.

“ மாயவன்றன் முன்னினோடும் வரி
வளைக்கை பின்னையொடும்
கோவலர்தஞ் சிறுமியர்கள் குழக்
கோதை பின்னையொடும் புறஞ்சோரா”
(சிலப். 17:28)

கோவலனையும், கண்ணகியையும்,

“ ஆயர் பாடியில் அசோதை பெற்
றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன்
கொல்லோ?
நல்லமுது உண்ணும் நம்பி? இங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங்
குலத்துத்
தொழுதை யாற்றினுள் தூமலர்
வண்ணனை
விழுமம் தீர்த்த விளக்குக் கொல்? ”
(சிலப். 16:46-52)

என மாதரியும், அவள் மகளும் ஐயுறுகின்றனர்.

மணிமேகலை எனும் காப்பியமும்,

“ மாமணி வண்ணனும் தம்முறும்
பின்னையும்
ஆடிய குரவை இல்தாம்”
(மணி. 19:65-66)

என்று நப்பின்னையைச் சுட்டுகிறது.

இந்தத் தமிழ்நாட்டு நப்பின்னையை யமுனை ஆற்றில் கண்ணனோடு சலக்ரீடை ஆடியவள் என்று இளங்கோவடிகள் குறிப்பிடுவதால், சில குழப்பங்கள் உண்டாகியுள்ளன. (நப்பின்னையைப் பற்றி விரிவாகக் ‘கண்ணனின் காதலி’ எனும் தலைப்பில், என்னுடைய ‘வாழ்வும் இலக்கியமும்’ எனும் நூலில் காண்க.)

திருமாலின் மூன்று மனைவியரை நம்மாழ்வார்,

“ உடனமர் காதல் மகளிர்
திருமகள், மண்மகள், ஆயர்
மடமகள் என்றிவர் மூவர்
ஆளும் உலகமும் மூன்றே”
(நான். திவ். 2766)

என்று சுட்டியுள்ளார்.

இங்குக் குறிப்பிடப்படும் ‘ஆயர் மடமகள்’ நப்பின்னை என்பது உறுதி. ஆனால் நப்பின்னையை ‘நீளாதேவி’ என்று வைணவ சம்பிரதாயத்தில் கருதுகின்றனர். ஆனால் நப்பின்னையை இராதையின் மூலமுன்வடிவம் Prototype (S. K. Chatterji, Collected Papers pp 48.50) தமிழ் நாட்டு மறுவடிவம் (Counterpart) (N. Subramanian, Pre-Pallavan Tamil Index. p. 570) என்பாரும் ஆராய்ச்சியுலகில் உள்ளனர்.

இந்த இரண்டையும் உடன்படாத வடஇந்திய மரபு ஒன்று இருக்கிறது. ‘பின்னை’ எனும் சொல்லிற்குப் பின் பிறந்தவள் என்று பொருள். அதாவது ‘தங்கை’ என்பதாகும். பலதேவர், கண்ணன் ஆகிய இருவருக்கும் பின் பிறந்தவளான சுபத்திரையைக் குறிப்பதாக திருமதி. கபிலா வாத்சாயன் கூறுவர் (நேரில் கூறியது). இதே கருத்தை, அண்மையில் வெளிவந்துள்ள ‘விரக-பக்தி’ எனும் நூலாசிரியர் எடுத்துக்காட்டி, ‘இது வட இந்திய மரபு வழிப்பட்ட தொன்மம் (Myth); இதனை, காதலி என்று ஆழ்வார்கள் எல்லாரும் ஏற்றுக்கொண்ட நப்பின்னையோடு ஏன் இணைக்க வேண்டும்? இது தமிழ் நாட்டு மரபு. ‘கண்

ண்ன்-நப்பின்னை' என்பார். தொல் பழங்காலத் தமிழகத்தின் இலட்சியக் காதலர்களாவர் (B. Hardy, Op. cit. p. 132) என்று தம் கருத்தை வெளியிட்டுள்ளார்.

## பலராமன் :

கண்ணனையும் பலராமனையும் ஒன்றாகச் சேர்த்தே பண்டைத் தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. வெண்மை நிறக்கடவுள் வாலியோனாகிய (நற்றிணை 37; புறநா. 56; கலி. 26; பரி. 2,20 சிலப். 5.121) பலராமன், அவருடைய பனைக் கொடியைப் பற்றிய குறிப்பு, தொல்காப்பியத்தில் காணப்படுகின்றது. (புறநா. 56:4:58:14; பரி. 2:2, கலி. 104:7-8).

பலராமரை, 'நம்பி மூத்தபிரான்' (மணி. 19:65) எனவும், 'மாயவன் தன்முன்' (கலி, 124; பரி. 2:20-21: சிலப். 17; ஆடுநர் புகழ்தல்) எனவும், 'மணிவண்ணன் தன்முன்' (மேற்படி) எனவும் சுட்டப்படுவதால், கண்ணனுக்கு மூத்தவர் என்பது உறுதிப் படுகிறது. இவ்விருவரும் கடலும், கடல் சார்ந்த மணலும் போன்றவர் என்று நிறத்தையும் இணைந்தே நிற்றலையும் உவமையாகக் கூறுவர். (சிலப். 9.10) பலராமரை 'வெள்ளை நாகர்' என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். பரிபாடல், அவரை ஆதிசேஷனின் அவதாரம் எனச் சொல்லுகிறது. (பரிபாடல் 15:19) பலராமருடைய கொடி பனைக் கொடி; (பரிபாடல் 1:4-5) அவருடைய படை நாஞ்சில் எனப்படும் கலப்பை.

> "கடல்வளர் புரிவளை புரையுமேனி
> அடலீவெந் நாஞ்சில் பனைக் கொடி
> யோன்"

(புறநா. 56) (பரி. 1:3,5; கலி.104; 7-8 சிலப்.14:9).

அவர் ஒரேயொரு காதில்தான் குழை அணிந்து இருப்பார் என்பதை 'ஒரு குழையவன்' (கலி. 105:1) எனவும், 'ஒரு குழை ஒருவன்' (கலி. 26:1; பரி. 1:5) எனவும் சுட்டுவர். பேராற்றல் வாய்ந்தவர் பலராமன் என்பதை 'வலியொத் தீயே வாலி யோனின்' (புறநா. 56) என்பதனால் அறிகிறோம்.

கண்ணன், பலராமன் ஆகிய இரு தெய்வங்களையும் ஒருங்கிணைத்தே சங்க கால மக்கள் வழிபட்டமை தெரிய வருகிறது.

இந்த இருவர் வழிபாடும், தொடக்கத்தில் ஆயர் குலத்து வீரர் வழிபாடாகத் தமிழ்நாட்டில் தோன்றி இருக்க வேண்டும் எனவும், பிராமண சமயத்தின் செல்வாக்கால் திருமாலின் அவதாரங்களின் வழிபாட்டு நெறியாக அது மாற்றப்பட்டது எனவும் வி. கனகசபை பிள்ளை கருதியுள்ளார். (The Tamils 1800 years Ago, p. 251) இக்கருத்து, நாம் முன்னரே கண்ட கண்ணன் வழிபாட்டு நெறியைப் பற்றிய கொள்கையோடு ஒத்துள்ளது.

ஆனால், மயிலை சீனிவேங்கடசாமி அவர்கள், 'கண்ணன், பலராமன் வழிபாடு ஜைனரால், தமிழகத்தில் புகுத்தப்பட்டது. கி. மு. மூன்றும் நூற்றுண்டுக்குப் பிறகு இந்தத் தெய்வ வழிபாடு ஜைனர் மூலமாக வந்தது. பலராமன், வசுதேவர் ஆகிய இருவரும் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரர் நேமிநாத சுவாமி காலத்தில் இருந்தவர்கள்' ('பல்கலைப் பழந்தமிழ்' எனும் நூலில் 'பழந்தமிழும் பல்வகைச் சமயமும்' எனும் கட்டுரை. பக். 14.) என்று ஒரு கருத்தைத் தெரிவித்துள்ளார். இக்கருத்து ஆராய்ச்சிக்குரியது.

'கண்ணன் வழிபாடு' தமிழ் நாட்டிலேயே தோன்றியது எனக் கருதுவதற்கும் இடம் உள்ளதை முன்னரே கண்டோம். வடக்கே இருந்துதான் பலதேவர் வழிபாடு தமிழ் நாட்டிற்கு வந்தது என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் வைதிக சமயத்தினர் கி. மு. மூன்றும் நூற்றுண்டிற்கு முன்பே, தமிழகத்தோடு தொடர்பு கொண்டுள்ளனர் (K. A. Nilakanta Sastri, A History of South India. p. 66) எனும் கருத்தை மறுப்பவர் இல்லை. அவ்வாறாயின், 'வைதிக சமயத்தவர்கள் கொண்டு வந்து புகுத்திய வழிபாட்டு நெறியாக இதனை ஏன் கொள்ளக்கூடாது?' எனும் ஐயம் எழுகிறது.

பலராமருடைய வழிபாடு கி. பி. நான்காம் நூற்றுண்டு அளவில் அடியோடு மறைந்துவிட்டது. வட இந்தியாவில், குப்த மன்னர்கள் காலத்தில் (கி. பி. 350-500), வைதிக சமயம், பிராமண (இந்து) சமயமாக மலர்ச்சி கொண்ட காலத்தில் இவ் வழிபாடு செல்வாக்கை இழந்துமெல்லமறைந்து போனதாக அறிஞர்கள் கருதுகின்றனர். (R.C. Majumdar, Ancient Indian Civilisation p. 60).

## திருமாலின் மக்கள் :

பிரமனைத் திருமாலின் மகனாகக் குறிப்பிடும் வழக்கத்தைக் காணுகின்றோம். திருமாலின் கொப்பூழில் தோன்றியவராகக் குறிப்பிடப்பட்டுள்ளார். (பரி. 3:13-14) 'பூவினுள் பிறந்தோன்' எனவும் போற்றப்படுகிறார். (பரி. திர. 1:7) பிரமனுக்குப் பல பெயர்கள் வழங்குகின்றன. அவற்றுள் 'படைத்தோன்' (புறநா. 194) 'நான்முகன்' (திருமுருகு. 165:பெரும்பாண். 403) என்பன பெரு வழக்குடையன. சிவபெருமானுடைய முப்புரம் எரிந்த போருக்குப் புறப்படுங்கால், பிரமன் தேரோட்டியாகப் பணி புரிந்ததைப் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. (பரி. 5:22).

மன்மதனைத் திருமாலின் மகனாகப் பண்டைத் தமிழர் அறிந்து இருந்தனர். காமக்கடவுள், காமவேள், நெடுவேள், உருவிலாளன், கலையிலாளன், (பரி. 18:28;8; 119;19:48; சிலப். 6:2 15:102; 14:111 28:4 :4:83: 10:8 மணி 20:91:5:6; 29:34; கலி. 140:6). மாறன் எனும் பல பெயர்களால் காமன் சுட்டப்படுகின்றான். அவனுடைய மனைவி ரதி (பரி. 19:48)

காமன் கரும்பு வில்லையும் மலர்அம்பு களையும் உடையவன் (மணி 20:92; 25; 90; சிலப். 2:26:4:82 8 62: 27:233; 28:19) மகரக் கொடியைப் பெற்றவன். (சிலப். 20:19) காதலர் இடையே காம உணர்வை இளவேனி லில் எழுப்புவன் (கலி. 147:42; 92:68-69) இவனுடைய தம்பி சாமன் எனப்பட்டான் (கலி.94:34) எனதிரு மாலின் மக்களைப் பற்றிய செய்திகள், பிற்காலத்திலும் இந்த அளவிலேயே காணப்படுகின்றன.

## அவதாரங்களும் புராணக் கதைகளும்.

சங்கப் பாடல்களில் திருமாலின் அவதாரங்களைப் பற்றிய கதைகளின் குறிப்புகள் பரவலாக இடம் பெற் றுள்ளன. மற்றும் பல்வேறு புராணக் கதைகளின் கரு முதல்களையும் அவற் றில் நாம் காணுகின்றோம்.

கூர்மாவதாரத்தைப் பரிபாடல்,

" புருவத்துக் கருவல் கந்தரத்தால்
தாங்கி இவ்வுலகம் தந்து அடிப்படுத்
தததை நடுவண்,
ஓங்கிய பலர் புகழ் குன்றினேடு
ஒக்கும்"

(பரி. 4:22-24)

எனச் சுட்டுகிறது. வராகமும் 'இலங்கு ஒலிமருப்பின் களிறும் ஆகி' எனவும் வேறெரு பாடலில் குறிப் பிடப்பட்டுள்ளது. (பரி.13:36).

நரசிம்ம அவதாரத்தைப் பரிபாட லும் சிலப்பதிகாரமும் சித்திரிக்கின் றன.

" ..........................நன் புகழ்
புகைந்த நெஞ்சின், புலர்ந்த சாந்தின்
பிருங்கலாதன் பலபல பிணிபட
வலந்துழி மலர்ந்து நோய்கூர் கூம்பிய
நடுக்கத்து
அலர்ந்த புகழோன் தாதை ஆகலின்
இகழ்வோன், இகழா நெஞ்சினனுக,
நீ இகழா
நன்றுநட்ட அவன் மார்பு முயங்கி
ஒன்றுகபட்டவன் உறுவரை மார்பின்

## வேதங்கள்

வேதங்களின் வயதை நிர்ணயிப்பது மிகவும சிரமம் என்றுலும் ஒரு கணக்குப் போட்டுப் பார்க்கலாம். வேதங்கள் உபநிடதங்கள் மூல மாகவும், சூத்திரங்கள் மூலமாகவும் காவிய இலக்கிய உருவத்தை அடைந்திருக்கின்றன. அதன் வயது ஏறத்தாழ சுமார் 3500 ஆண்டு கள் இருக்கலாம் என்பது ஒரு சுமாரான கணக்கு. அப்படியும் அதன் உருவம் பெரிதாக மாறவில்லை. இன்றைக்கும் அது அப்படியே பயன்படு கிறது.

பெரிய கோயில்களிலும், மடங்களிலும் உள்ள பாத்திரங்கள் தினந்தோறும் எல்லோராலும் உபயோகிக்கப்படுகின்றன. அதனுல் அவை சீக்கிரமாகத் தேய்ந்து உருவம் மாறிவிடுகின்றன. பெரிய பணக் காரர்கள் வீட்டில் போய்ப் பார்த்தால், அதுபோலப் பெரிய பாத்திரங் கள் இருக்கும். ஆனுல் அவை கல்யாணம் அல்லது விழாக்களில் மட்டுமே உபயோகிக்கப்படுகின்றன. ஆகையால் அவை சீக்கிரமாகத் தேயாமல் உருவம் மாறுமல் இருக்கின்றன. அவற்றைப் புதுப்பிக்க வேண்டிய அவசியம் இல்லை. அப்படியே பயன்படுத்தலாம். அதுபோல வேதங்கள் பழமையானவையானுலும் எல்லோராலும், எப்படி வேண்டுமானுலும் உபயோகிக்கப்படவில்லை. அதை சரியாகச் சொல்லி, அதன் சரியான பலனை மக்களுக்கு வாங்கிக் கொடுக்கக் கூடியவர்கள் மட்டுமே உப யோகிக்கிருர்கள். அதனுல் அதன் உருவம் கெடாமல், சிதையாமல் இன் றைக்கும் அது அப்படியே இருக்கிறது.

—ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்.

அனுப்பியவர்: வி. ஸ்ரீதர்-கோயம்புத்தூர்.

படிமதம் சாம்ப ஒதுங்கி
இன்னல் இன்னரொடு இடிமுரசு
முயங்க
வெடிபடா ஓடி தூண் தடியொடு
தடிதடி பலபட வகிர் வாய்ந்த
உகிரினே"

(பரி. 4:10-20)

என்பது கடுவன் இளவெளினையார் தீட்டியுள்ள சொற்சித்திரமாகும். பல பாடல்களில் 'மடங்கல்' எனும் சொல்லால் 'நரசிம்ம' அவதாரம் சுட்டப்படுகிறது. (சிலப். 17:3:பரி. 4:19-21).

வாமனுவதாரத்தைப் பண்டைத் தமிழர் நன்கு அறிந்திருந்தனர். மாவலியைப் பற்றிய குறிப்புகள் பல உள்ளன. இறைவன் ஈரடியால் மூவுலகு அளந்த திருவிக்கிரமாவதார மும் இதனேடு இணைத்தே பேசப்படு கிறது. (பெரும்பாண். 29: பரி. 3:20: கலி. 124; சிலப். 6:55; 11:145; திருக். 610 திரிக. கடவு. சிலப். 17;

" நனந்தலை உலகம் வளைஇ, நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு
தடக்கை
நீர்செல, நிமிர்ந்த மாஅல்"

என்பது முல்லைப்பாட்டு (1-3) காட் டும் நெடியோன் அவதாரமாகும்.

பரசுராமர் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் உள்ளன.

" கெடா அத்தீயின் உருகெழு செல்லூர்
கடாஅ யானைக் குழூஉ சமம் ததைய
மன்மருங்கு அறுத்த மழுவாள்
நெடியோன்"

(அகநா. 220)

என்பது மதுரை மருதனிள நாகனரின் பாடற்பகுதியாகும். (மணி. 22:34)

இராமவதாரம் பற்றிய செய்திகள் மிகச் சிலவாகவே சங்க இலக்கியத் தில் இடம் பெற்றுள்ளன. அவற்றி லிருந்து 'இராமனை ஒரு தெய்வமாகப்

பண்டைத் தமிழர் போற்றினரா?' என்பதை ஐயப்பாட்டிற்குரியதாக இருக்கிறது. இராமாயணக் கதை, பாரதத்திற்கு முற்பட்டது என இக் காலத்தில் நாம் நினைக்கின்றோம். ஆனால் பாணினியும் பதஞ்சலியும், இராமாவதாரத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை என அறிஞர் கூறுகின்றனர். (R. G. Bhandarkar, Early History of Deccan, p. 17 A. L. Bashyam, The Wonder that was India pp. 39-40 K. A. Nilakanta Sastri, History of India, Vol I., p, 34 N, Subramanian, Sangam Polity, pp, 413-414). பாரதக் கதை நிகழ்ச்சிகள் பற்றி பண்டைத் தமிழர்கள் அறிந்து இருந்தனர். இராமா வழிபாடு பிற்காலத்தில் தோன்றியதாக இருத்தல் கூடும். கண்ணன் எனும் பெயருடைய சங்கப் புலவர்கள் முப்பத்து நான்கு பேர் இருந்ததாகத் தெரிகிறது. (ந. சஞ்சீவி. சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, பக். 39.) ஆனால் சங்க காலப் புலவர் ஒருவருக்குக்கூட 'இராமன்' எனும் பெயர் வழங்கியதற்குச் சான்றே கிடைக்கவில்லை. இதனால், சங்க காலத்தில், தமிழ் மக்களால், இராமன் தெய்வமாகக் கருதப்படவில்லை என்பதே புலனாகிறது.

தமிழ் நாட்டில் இராமனைப் பற்றி வழங்கிய கதைக் குறிப்புகள் சில வட இந்திய இராம காதையில் காணப் பெறவில்லை. இராவணனை அழித்தவன் இராமன். இராவணனை அரக்கன் (சிலப். 14:48; புறநா 368) எனவும், இலங்கைக்கிழவன் (பழமொ 92) எனவும் சுட்டியுள்ளனர். இவனுடைய தம்பி, வீடணனை 'இலங்கைக் கிழவர்க்கு இளையோன் (மேற்படி) என்று குறிப்பிட்டுள்ளனர்.

இராமன், சீதை எனும் பெயர்கள் வழக்கத்தில் இருந்தன. (அகநா. 20: புறநா. 378; பழமொ. 92) இராமனை அருந்திறல், (சிலப். 13:65) 'கருந் திறல்' எனவும், சீதையை மாது (மேற்படி 14:46) எனவும் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் அமைத்துள்ளனர். தந்தையின் ஆணைக்கு இணங்கி, மனைவியுடனும் இளவலுடன் காட்டிற்குச் சென்று (சிலப். 13:65:14: 46) இராமன் வாழ்ந்ததைப் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் உள்ளன.

புறநானூற்றில், இராவணனால் கவர்ந்து செல்லப்பட்ட சீதை, தன்னுடைய அணிகலன்களைக் கழற்றி எறிந்ததை எடுத்துக்கொண்டன குரங்கினம். ஆனால் எதை எங்கு, எப்படி அணிவது என்பதை அறியாமல், தாறுமாறாக அணிந்துகொள்ள முயன்றன எனும் கதைக் குறிப்பு காணப்படுகிறது. (அகநா. 378)

அடுத்து தனுஷ்கோடியில், ஆலமரத்தின்கீழ் இராமன் மந்திராலோசனை செய்துகொண்டு இருந்த பொழுது, ஆரவாரம் செய்த பறவைகளை அமைதியாக இருக்குமாறு சக்கரவர்த்தித் திருமகன் செய்ததைப் பற்றிய ஒரு நிகழ்ச்சி அகநானூற்றில் இடம் பெற்று இருக்கிறது. (அகநா. 70) இவ்விரு கதைக் குறிப்புகளும் வால்மீகி இராமாயணத்தில் காணப்படவில்லை என்பது மு. இராகவையங்காரின் துணிபாகும். (ஆராய்ச்சித் தொகுதி. ப. 126) இக்கதைகள் சங்க காலத் தமிழ் மக்களின் கற்பனைப் படைப்புகளாக இருக்கலாம். (பரி. 19:80; சிலப். 16; பட்.ர். 1) இலங்கை அழிக்கப்பட்டமையும் (சிலப். 13:61-65) இராமனைப் பிரிந்த அயோத்தி அடைந்த அவலத்தையும் (சிலப். 13:64-65) பண்டைத் தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர்.

(தொடரும்)



# தயாசதகம்

நாவல்பாக்கம் தேவநாதாச்சாரியர்

ஸ்ரீமந் நிகமாந்த மகாதேசிகன், திருவேங்கடமுடையானுடைய திருவருளின் மகிமையை அனுபவித்து, பரவசமான நிலையில் புனைந்த கவிதையே "தயாசதகம்" என்பது. "தானே யானென்பானாகித் தன்னைத் தான் பாடி" என்னும் ஆழ்வாரின் நிலையே இங்கும் அமைந்தது.

**वेदान्तदेशिकपदे विनिवेश्य बालं,**
**देवो दयाशतकमेतदवादयन्माम् ।**
**वैहारिकेण विधिना समये गृहीतं**
**वीणाविशेषमिव वेङ्कटशैलनाथः ।।**

*(தயாசதகம்—104)*

என்னும் ச்லோகத்தில் ஸ்ரீ தேசிகனே இதை விளக்குகிறார். ஸம்ஸ்க்ருத பாஷையில் "வ்ருத்தங்கள்" பலவிதமுண்டு. அவற்றுள் மிகவும் சிறியதாகிய "அனுஷ்டுப்" வ்ருத்தத்தில் தொடங்கி, படிப்படியாக வளர்ந்து கொண்டே போய், விரிவான "மந்தாக்ராந்தா" "சிகரிணீ" போன்ற வ்ருத்தங்களில் முடிவடைகிறது இந்த ஸ்தோத்ரம். கங்கை—காவேரி போன்ற புனிதமான லோக க்ஷேமத்துக்கு இன்றியமையாதனவாகிய புண்ய நதிகள், உற்பத்தியாகுமிடத்தில் சிறுவாய்க்கால்போலவே இருக்கும். ஆனால் அவை படிப்படியாக விரிந்துகொண்டேபோய்க் கடலில் கூடுமிடத்தில் மிகமிக விசாலமாகிவிடும். திருவேங்கடமுடையானுடைய திருவருளும் இவைபோன்றதேயாம். பொருளில் இழியாமல், நூலின் அமைப்பை மட்டுமே உற்று நோக்கினால் இது புலனாகும். "**इक्षुसारस्त्रवन्ती**" கரும்புச்சாறு ஆறாகப் பெருகுகிறது என்பது ஸ்ரீ தேசிகனுடைய அனுபவம்.

நெடு நாட்களாகவே ரஸிகர்களான அடியார் குழாங்களால் இந்த ஸ்தோத்ரம் சிரத்தையுடன் அனுசந்திக்கப்பட்டு வருகிறது. சில இடங்களில் பாடபேதங்கள் ஏற்பட்டிருக்கக்கூடியது ஸஹஜமே. அவற்றில் சிலவற்றை அடியேனுடைய சிற்றறிவிற்கேற்ப ஈண்டு விளக்குகிறேன். ரஸிகர்களான ஸஹ்ருதயர்கள் நடுவு நிலைமை குன்றாமல் கவனிக்க வேண்டுகிறேன்.

தயாசதகத்தில் தொண்ணூற்றாவது ச்லோகம் :

"**सन्तन्यमानमपराधगणं विचिन्त्य**
**त्रस्यामि हन्त भवतीं च विभावयामि ।**
**अह्लाय मे वृषगिरीशदये जहीमाम्**
**आशीविषग्रहणकेलिनिभामवस्थाम् ।।**"

என்பது. இந்த ச்லோகம் எனக்குக் கிடைத்த பதிப்புகளில் இப்படியேதான் அச்சிடப்பட்டுள்ளது. அவ்வப்பொழுது ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டிகளிலும் இப்படியே அனுஸந்தானம் நடந்து வருகிறது.

இதில் முதலெழுத்து "**त**" என்று இருந்திருக்கக்கூடும். பிறகு காலக்ரமத்தில் அது "**स**" என்று மாறியிருக்கலாம். அதாவது "**सन्तन्यमानं**" என்பது பழங்காலத்தில் "**तन्तन्यमानं**" என்றிருந்திருக்கக்கூடும் என்பது அடியேனுடைய ஊகம். இப்படியே சில பதிப்புகளும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய அனுஸந்தானமும் இருக்கக் கூடும். ஆனால் எனக்குத் தெரியவில்லை. இருந்தால் அதை உவகையுடன் வரவேற்க வேண்டும். ஸம்ஸ்க்ருத பாஷையில் பரிசயமுள்ளவர்களுக்கு இதிலுள்ள தாரதம்யம் தெள்ளென விளங்கும். மற்றவர்களுக்கும் உபயோகமாக இதைச் சிறிது விளக்குகிறேன்.

'குற்றங்களைக்கணக்கு வழக்கில்லாமல் பண்ணிக் குவித்துக் கொண்டேயிருக்கிறேன். இதற்கெல்லாம் தகுந்தவாறாக தண்டனை கிடைக்கும். அது தவிர்க்க முடியாது' என்பது எனக்கு வெகு நன்றாகத் தெரியும். ஆனாலும் நான் மேன்மேலும் அந்தத் தீய வழியிலேயே சென்றுகொண்டிருக்கிறேன். இதை நினைக்கும்போதே மனம் பதறுகின்றது. அந்தோ! உன்னை (வெங்கடாசலபதியின் தயையை)யும் நினைத்துப் பார்க்கிறேன். (கடும் குற்றவாளியான எனக்கு எம்பெருமானுடைய கருணையொன்றே கதி). ஏழுமலையானுடைய தயா தேவியே! விஷப் பாம்பைக் கையால் பிடித்து விளையாடுவது போன்றதான இந்த எனது பரிதாபமான நிலைமையை உடனே அகற்றிவிடுவாயாக" என்பது இதன் கருத்துச் சுருக்கம்.

"**सन्तन्यमानं**" என்னும் பதம் "நன்றாகப் பண்ணிக்கொண்டே இருக்கப்படுவது" என்று பொருள்படும். குற்றங்களின்கூட்டத்திற்கு விசேஷணமிது. "குற்றங்களைப் பண்ணும்போது, சிறிதும் கூச்சமில்லாமல் நன்றாகப்பண்ணிக்கொண்டிருக்கின்றேன்" என்றவாறு. "**तन्तन्यमानं**" என்று பாடமானாலும் குற்றங்களின் கூட்டத்துக்கு விசேஷணமேயாமிது "ஒருதரம்இரண்டுதரமில்லை. இடையறாமல் திரும்பத்திரும்பப் பண்ணிக் கொண்டே இருக்கப்படும் குற்றங்களின் கூட்டம்" என்னும் பொருள் இதில் கிடைக்கும். இந்தக் கருத்து கவிதையின் நயத்திற்கு மிகப் பொருத்தமாயமையும்.

மேலும், இதே ச்லோகத்தில் இரண்டாவது பாதம் "**त्रस्यामि**" என்று தொடங்குகிறது. முதல் பாதமும் "**तन्तन्यमानं**" என்று இருந்தால் "**त**" என்னும் எழுத்தே தொடக்கத்தில் தொடர்ந்து வருவதாகிற "அனுப்ராஸ"மும் இடம்பெறும். ஸ்ரீ தேசிகனுடைய கவிதையில் இந்த அனுப்ராஸம் ஸர்வ ஸாதாரணமாய் அமைந்திருப்பதொன்றும்.

"**अनुचरशक्तयादिगुणां**
**अग्रेसरबोधविरचितालोकाम् ।**
**स्वाधीन वृषगिरीशां**
**स्वयं प्रभूतां प्रमाणयामि दयाम् ।।**"

*(தயாசதகம்—11வது ச்லோகம்)*

என்னும் ச்லோகத்தில் முதல் இரண்டு பாதங்களும் "**अ**" என்னும் எழுத்திலேயே தொடங்குகின்றன. மூன்றாவது நாலாவது பாதங்களிரண்டும் "**स्व**" என்னுமெழுத்திலேயே

(8-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சொற்களாலான திராவிட வேத மாகிய பிரபந்தங்கள், எம்பெருமானு டைய சமஸ்த கல்யாண குணங்களை யும், ஸ்வரூபத்தையும் உள்ளபடி உணர்ந்து, முகம் பார்க்கும் கண்ணாடி யில் காண்பது போல் எடுத்துக்காட்டு வதால், பெருமானுக்கு முன்பு பாரா யணம் செய்வதற்கு மற்றொரு காரணமாகிறது. இது மட்டுமின்றி, திருமங்கையாழ்வாருக்கு நம் பெரு மாள் (ரங்கநாதன்) கொடுத்தவரத் தின்படி, மார்கழி மாதத்தில் நடந்து வரும் திருவத்யயனோஸ்தவத்தின் போது பெருமாள் வடமொழி வேதத்தை செவிசாய்த்தருளுவது போலவே, நம்மாழ்வார் அருளிச் செய்துள்ள தமிழ் வேதமாகிய திரு வாய் மொழியையும், மற்ற பிரபந் தங்களையும் இயலும், இசையுமாக அரையர்கள் கானம் செய்வதை நம் பெருமாள் செவிசாய்த்தருளுவதால் பிரபந்தத்திற்கு ஏற்றமும், வேத சாம்யமும் கிடைக்கிறது. இக்காட் சியை இன்றும் பெரிய திவ்ய தேசங் களில் உள்ள ஸந்நிதிகளில் நடை பெறுவதைக் காணலாம்.

**வேத, பிரபந்தங்களை சொல்ல வேண்டிய கால நியதிகள் :**

வேதங்களை சில காலங்களில் அத்ய யனம் செய்ய வேண்டும், சில காலங் களில் அத்யயனம் செய்யக் கூடாது என்று காலநியதிகள் இருப்பது போலவே தமிழ் வேதத்திற்கும் கால நியதிகள் உள்ளன. இக்கால நியதி கள் ஸ்ரீமந் நாதமுனிகளால் ஏற்படுத் தப்பட்டது எனத் தெரிகிறது. இதன் படி பெருமாள் தைலக் காப்பு சாத்திக் கொள்ளும் திருக்கார்த்திகை தொடங்கி, திருவத்யயன உத்ஸவம் ஆரம்ப பரியந்தம், திவ்ய பிரபந்தங் களுக்கு உத்ஸர்ஜன காலம், அதாவது இக்காலத்தில் எங்கும் பிரபந்தங்கள் சேவிக்கக்கூடாது என்றும், மார்கழி மாஸத்தில் சுக்லபக்ஷ பிரதமை முதல் பிரபந்தங்களுக்கு உபக்ரம காலம் என்றும் அப்போதுதான் பிரபந்தங் கள் சேவிக்க தொடங்கலாம் என்றும் சில வரையறைகளை ஏற்படுத்தியிருக் கிறார். ஆனால் ஸந்நிதிகளிலும், வீடு களிலும், திருப்பல்லாண்டு, திருப் பள்ளி எழுச்சி, நீராட்டம், பூச்சூட் டல், திருப்பாவை, அமலனாதிபிரான், முதலிய சில பிரபந்தங்கள் எப் போதும் சேவிக்கலாம். இவை நித் யானுஸந்தானம் என்றும் நியமனம் செய்துள்ளனர்.

**பிரபந்தங்களுக்குள்ள வியாக்யானங்கள் :**

வேதங்களுக்கு வித்யாரண்யர் போன்ற சில மஹான்கள் வியாக் யானம் (பாஷ்யம்) செய்துள்ளனர். அதைப் போலவே தமிழ் வேதமாகிய பிரபந்தம் முழுவதற்கும் வியாக் யானச் சக்ரவர்த்தியாகிய பெரிய வாச்சான் பிள்ளை வியாக்யானங்கள் செய்துள்ளார். இவற்றில் பெரியாழ் வார் திருமொழி நான்கு பத்துக் களின்வியாக்யானங்கள்செல்லரித்துப் பாழாகி விட்டபடியால் இப்பகுதிக்கு மட்டும் ஸ்ரீமணவாள மாமுனிகள் வியாக்யானம் செய்துள்ளார். தவிர பிரபந்தத்தில், மந்த்ர ரத்னமாகிய த்வயார்த்தை'யும் தீர்க்க சரணா கதியை தெரிவிக்கும் சாமவேதத்தின் சாரமாகவும், சாரதமமான பிரபந்த மான, 'திருவாய்மொழிக்கு' மட்டும். 'ஆறாயிரப்படி' 'ஒன்பதினாயிரப் படி', 'பன்னீராயிரப்படி' 'இருபத்தி நாலா யிரப்படி', 'ஈடு முப்பத்தாறாயிரப்படி' என்ற புகழ் பெற்ற பல வியாக் யானங்களும், பூர்வாசார்யர்கள் எழுதியுள்ளனர். இதைத் தவிர பிற் காலத்தில், 'பெரிய பரகாலஸ்வாமி' என்பவராலும், 'பிரதிவாதி பயங் கரம் ஸ்வாமி' யாலும் மற்றும் பல ராலும் திருவாய் மொழிக்கு வியாக் யானங்களை எழுதப்பட்டுள்ளன. பலர் எழுதிக்கொண்டு மிருக்கிறார்கள், இவற்றிக்கெல்லாம் பகவத் விஷயம். என்று பெயராகும். இவ்விதம் திரு வாய் மொழிக்கு அநேக வியாக் யானங்கள் ஏற்பட்டிருப்பதிலிருந்தே தமிழ் வேதத்தின் சீர்மையும் ஏற்ற மும் நன்கு புலப்படும்.

**முடிவுரை :**

**பிரபந்தங்களால் அடையும் பயன் :**

ஆழ்வார்களின் ஈரச் சொற்களா லான, அருளிச் செயல்களாகிற பிர பந்தத்தின் மூலம் ஜீவாத்மாக்களா கிய நாம் அடையும் பயன் யாதெனில், ஜீவாத்மாக்களாகிய நாம் அறிய வேண்டிய பரப்ரம்ஹத்தின் ஸ்வ ரூபமும் அடைகின்ற ஆத்மாக்களின் ஸ்வரூபமும், அடைவதற்குரிய உபா யத்தின் ஸ்வரூபமும், அடைந்ததற்கு பலனை பலஸ்வரூபமும், அவ்விதம் பலனை அடையவொட்டாமல் தடுக் கும் விரோதி ஸ்வரூபமும், ஆகிய இவைகளை நன்கு தெரிந்து கொள்ள லாம். இதையே, 'அர்த்த பஞ்சகம்' என வடமொழியில் கூறுகிறார்கள். இவைகளைத்தான் வேத, உபநிஷத் துக்களும் இதிஹாஸ புராணங்களும், வேத, வேதார்த்தங்களை அறிந்தவர் களான, மஹாத்மாக்களாகிற மகரிஷி களும் சொல்லுகிறார்கள். மேலே கூறிய கருத்தை தெரிவிக்கும் ஸ்லோ கம் பின்வருமாறு:

" ப்ராப்யஸ்ய ப்ரம்ஹ ணோரூபம்,
ப்ராப்து: சப்ரத்ய காத்மன:
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தே: ததா
ப்ராப்தி விரோதி ச |
வதந்தி ஸகலாவேதா: ஸேதிஹாஸ
புராணகா:
முனயஸ்ச மஹாத்மானோ வேத
வேதார்த்த வேதிந: ||

அடையும் பலனை சுருக்கமாகக் கீழ் கண்டவாறும் சொல்லலாம்.

பிராட்டியோடு கூடின பெருமாளே உபேயம். அவனை அடைய அவனே உபாயம். திவ்ய தம்பதிகளிடம் யாசித்துப் பெறும் கைங்கர்யமே புரு ஷார்த்தம்.நம்முடைய வெறுமையை, அவனிடம் விண்ணப்பித்து அவனையே உபாயமாகப் பற்றுவது சரணாகதி யாகும். நம்மிடம் தோஷம் அதிக மாக இருப்பினும் ஸர்வஸக்தியும், வாத்ஸல்யம், க்ருபை முதலிய கல் யாண குணங்களையுமுடைய எம்பெரு மான் வாழ்வளித்து ரக்ஷிப்பான் என் பதே நாம் பெறும் உண்மையாகும்.

# 1989-ஆம் ஆண்டு ராசி பலன்கள்

[உங்களுடைய ஜன்ம இராசி, ஜன்ம இலக்னம், பிறந்த தேதி (ஆங்கிலம்) மூன்றின் பலன்களையும் கண்டு அறியவும்.]

## மேஷம்

(அஸ்வினி, பரணி, கார்த்திகை 1-ஆம் பாதம்: ஏப்ரல் 14-மே 15)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு குரு அநுகூலன். சனி, ராகு, செவ்வாய் பெரிதும் நன்மை, கெடுதல் இரண்டும் கலந்தவர்களாக இருப்பார்கள்.

ஜனவரியிலிருந்து ஏப்ரல் வரை நல்லதும் கெட்டதும் கலந்த பலன் எனச் சொல்லலாம். தன லாபம் இருக்கும்; ஆனால், அதோடு பணச் செலவும் சம அளவில் இருக்கும். பிரயாணங்கள் அடிக்கடி நிகழும். வியாபார நோக்கிலும் சற்று அநுகூலமாகவே காணப்படுகிறது. மன அமைதி, புதிய அலுவல்களில் உற்சாகம், துணிவு, காரிய வெற்றி, பண வரவு போன்ற நற்பலிதங்கள் உண்டாகும்.

மே முதல் ஆகஸ்ட் வரை சிறந்த காலம். அனைத்திலும் நன்மை. உடல் நலம், தொழிலில் மேன்மை, கவுரவம, செல்வாக்கு முதலியவற்றில் ஏற்றம். செப்டம்பர் முதல் டிசம்பர் வரை சற்று சிரமமான காலம். அலுவல்களில் தாமதம், அலைச்சல். உடல் நலத்திலும் கவனம் தேவை.

தொழிலதிபர்களுக்கு ஆண்டின் முன் பாதி இலாபமாக அமையும். அரசியலில் ஈடுபட்டோர்க்கு அலைச்சல் இருந்தாலும், முன்பாதி வெற்றியுடன் விளங்கும்.

பொதுவாக, இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு மூன்றில் இரண்டு பாகம் சுபம் என்றே சொல்லலாம். சுபகாரியங்கள், குடும்ப அபிவிருத்தி, புதியவர்களின் அறிமுகம் மற்றும் அதன் வாயிலாக இலாபம் போன்ற விருப்பமான பலிதங்கள் நன்கு நிறைவேறும்.

பரணி நட்சத்திரத்தில் பிறந்தோருக்கு ஏனையோரைவிட அதிக நன்மை உண்டாகும்.

## ரிஷபம்

(கார்த்திகை 2, 3, 4ஆம் பாதங்கள், ரோகிணி, மிருக சீர்ஷம் 1, 2 பாதங்கள்: மே 15-ஜூன் 15)

இந்த இராசிக்காரர்களுக்குக் கோசாரம் எவ்வகையிலும் அநுகூலம் இல்லை. ஆண்டின் முன் பாதியில் கிரகங்கள் யாவும் எதிரிடையாகவே அமைந்துள்ளன. பின் பாதியில் சற்று நலம். இவர்களுக்கும் இவர்களுடைய குடும்பத்தினருக்கும் உடல் நலமின்மை, மனக்கவலை, வியாபாரத்தில் செலவு மிகுதியாயிருக்கும். புதிய முயற்சிகளுக்குத் தடைகள், கெட்ட பலன்கள் ஏற்படும். எனினும், பின் பாதியில் இந்த இடைஞ்சல்கள் குறைந்து, சற்று நிம்மதி ஏற்பட்டு, மன அமைதி, அலுவல்களில் வெற்றி, தன லாபம் உண்டாகும்.

பிரயாணங்கள் மற்றும் அதன் வாயிலாக செலவுகள் ஏற்பட்டாலும், மார்ச், செப்டம்பர் மாதங்கள் அநுகூலம்; அப்போது மேற்கொள்ளப்படும் முயற்சிகளில் வெற்றி, நண்பர்கள் மூலமாக காரியஜயம், மனச்சந்தோஷம் உண்டாகும். அரசியலில் ஈடுபட்டோர்க்கு நல்ல காலம்.

மீதி மாதங்களில் ஒவ்வொரு காரியத்திலும் தடையும் சிக்கலும் தென்படுகின்றன. உடல் நலத்தில் கவனம் தேவை. குழந்தைகளைப் பொறுத்தவரை இவ்வாண்டுகெடுதல் எதுவுமின்றி இருக்கும். அவர்கள் படிப்பு விஷயத்தில் தொந்தரவு எதுவும் இராது.

ஆண்டின் நடுப்பகுதியில் சுபகாரியங்கள் நிறைவேறக்கூடும். ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு மற்றையோரைவிட அதிகக் கெட்ட பலன்கள் தென்படுகின்றன.

---

**டாக்டர். எம். சங்கமேசம்,**
***திருப்பதி.***

---

## மிதுனம்

(மிருக சீர்ஷம் 3, 4 பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள் ஜூன் 15-ஜூலை 17.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு எல்லா விஷயங்களிலும் அநுகூலமாக அமையாது. மிக அதிகச் செலவு, உடல்நலமின்மை, விவகாரங்களில் சிக்கல்கள், வீண் முயற்சி போன்ற கெட்ட பலன்களையே பொதுவாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. இருந்தாலும், இன்னொரு பக்கம், தன லாபம், புண்ணிய யாத்திரை, சுபச் செலவுகள் போன்ற அநுகூலமான பலன்களும் ஏற்படும்.

மே முதல் ஜூலை வரை வீட்டில் சுப காரியங்களும் அதன் மூலமாகச் செலவும் உண்டாகும். வியாபாரிகளுக்கு அதிக இலாபம் இராது என்றாலும் தொழிலில் அவ்வளவு சிரமம் தென்படாது. வழக்கு விவகாரங்களில் சிக்கல்கள் ஏற்பட்டாலும், கடைசியில் அவை நல்லபடியாகவே முடியும். மனைவி, குழந்தைகளைப் பொறுத்த வரை, இவ்வாண்டில் பெருமளவிற்கு அநுகூலமும் சுகமும் ஏற்படும்.

அக்டோபரிலிருந்து வருஷம் முடிவு வரை லேவாதேவி மற்றும் விவகாரங்களில் சிக்கல்களே தென்படுகின்றன.

பாதி நலம். வியாபாரிகளுக்குப் பின் பாதி இலாபம். மாணவர்களுக்கு மார்ச் பரீட்சைகள் அநுகூலம். ஸ்திரீகள், கல்யாணம் ஆகாதவர்கள் ஆகியோருக்கு நடுப்பகுதி சற்று நலமாக அமையும். பொதுவாக, இந்த ஆண்டு இந்த இராசிக்காரர்களுக்கு எதிலும் பெரிய அநுகூலம் இல்லாவிட்டாலும், நல்லது கெட்டது கலந்து இருப்பதனல் மன அமைதி இருந்து வரும். ஆண்டின் இறுதியில் உடல் நலத்தில் கவனம் தேவை. அவிட்ட நட்சத்திரக்காரர்கள் மற்றையோரைவிட அதிக யோகமுள்ளவர்களாக இருப்பார்கள்.

## கும்பம்

(அவிட்டம் 3, 4 பாதங்கள், சதையம், பூரட்டாதி 1, 2, 3-ஆம் பாதங்கள்: பிப்ரவரி 13—மார்ச் 15.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு முன்பாதி அநுகூலமில்லை. ஆனல், அவ்வளவுக்கவ்வளவு பின் பாதி சுபமாக இருக்கும். வருஷ முடிவில் சுப பலனேஅதிகமாக அமையும்.

மார்ச் முதல் ஜூன் வரை அநேக விதமான இடைஞ்சல்கள் ஏற்பட்டு தொல்லை கொடுக்கும். ஜூலை முதல் எல்லாத் தொந்திரவுகளும் நீங்கி சுபமான காலம் ஆரம்பமாகும். வைத்தியர்கள், அரசியல்வாதிகள் நற்பலிதம் அடைவர். ஸ்திரீகள், கன்னிப் பெண்கள், மாணவர்கள் ஆகியோருக்கு ஆண்டின் பின் பாதி அநுகூலமாக அமைந்து வெற்றி தரும். சுபகாரியங்கள் நடைபெறும். வீடு கட்டுதல் போன்ற பணிகளில் இடைஞ்சல் எதுவும் இல்லாது நல்ல படியாக அமையும். வியாபாரிகளுக்கு ஆண்டின் ஆரம்பத்திலிருந்து அக்டோபர் வரை நல்ல காலம். அதற்குப் பிறகும் கூட, இலாபமாகவே இருந்து வரும் எனச் சொல்லலாம். பொதுவாக, இந்த இராசிக்காரர்களுக்கு இந்த வருஷத்தில் சுப பலன்களே அதிகம் எனச்சொல்லலாம். அவிட்ட நட்சத்திரக்காரர்களுக்குப் பிறரை விட நல்ல காலம்.

## மீனம்

(பூரட்டாதி 4-ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி: மார்ச் 15—ஏப்ரல் 14.)

இந்த இராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு அநுகூலம் எதுவும் தென்படவில்லை. எல்லா அலுவல்களுக்கும் இடைஞ்சல், ஆதாயத்திற்குத் தடைகள், எதிர்பாராத சிக்கல்கள், உடல் நலமின்மை போன்ற கெட்ட பலன்களைச் சொல்ல வேண்டியிருக்கிறது. வருஷ ஆரம்பத்தில்கெட்ட பலன் அதிகமாகத் தென்படுகிறது. எனினும், பையப்பைய சற்று மேம்பாடு தெரிந்தாலும், முழுமையாக மனநிறைவு இராது. உத்தியோகத்தில் தொந்திரவுகள், மாணவர்களுக்கு படிப்பில் இடைஞ்சல்கள் அதிகம். ஆனாலும், ஆண்டின் பின் பாதியில் சற்று மேன்மை காணப்படுகிறது; நற்பலிதங்களும் ஏற்பட்டு, மன உற்சாகமும் தைரியமும் உண்டாகும். வியாபாரிகளுக்குப் பங்கு விலைகள் குறையும். கல்யாணமாகாதவர்களுக்கு அநுகூலமான காலமில்லை. வீட்டுப் பிரச்னைகள் தோன்றும். பயனற்றப் பேச்சு வார்த்தைகள் தோன்றும். ஆகஸ்ட் மாதத்திலிருந்து சற்று நலமாகத் தெரிகிறது. அரசியல்வாதிகளுக்கு இது நல்ல காலமாக அமையாது. ரேவதி நட்சத்திரக்காரர்களுக்கு மற்றையோரைவிட நிறைய அநுகூலங்கள் ஏற்படும்.



ஸ்ரீ மஹா பலேஸ்வரசுவாமி கோயிலும், அக்கோயில் மூலவரும் - கோகர்ணம்.

கைலயங்கிரியிலிருந்து இராவணன் சிவனிடமிருந்து ஆத்ம லிங்கத்தைப்பெற்றுக் கொண்டு இலங்கைக்குச் செல்லும் போது விநாயகப்பெருமானின் திருவிளையாடலால், அவ் ஆத்மலிங்கம் இத்தலத்தில் இடம் பெற்றுவிட்டது. அதுவே கோகர்ண புண்ணியத் தலமாகும்.

திருமதி. எம். ராஜ்யலட்சுமி-திருப்பதி.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS. TIRUPATI-517501.



ANNUAL THEPPOTSAVAM AT
SRI KAPILESWARA SWAMI TEMPLE AT TIRUPATI.

